# அவிநாசி அருள்தமிழ்

## (அவிநாசித்தலச் செம்மொழித் துதிகள்)



# அவிநாசி அருள்தமிழ்

## (அவிநாசித்தலச் செம்மொழித் துதிகள்)

நூலாசிரியர்கள்

வண்ணச்சரபம்

**தவத்திரு. தண்டபாணி சுவாமிகள்**

சிரவையாதீனம்

**தவத்திரு கந்தசாமி சுவாமிகள்**

பதிப்பாசிரியர்

**சிரவையாதீனக் கவிஞர்**

**பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்**




அவிநாசித் திருக்கோவில் திருக்குடமுழுக்கு மலர்

சிரவணபுரம் கௌமார சபை வெளியீடு

14.07.2008

| | | |
|---|---|---|
| சிரவைக் கௌமார சபை வெளியீட்டு எண் | : | 273 |
| நூல் பெயர் | : | அவிநாசி அருள்தமிழ் |
| நூலாசிரியர்கள் | : | வண்ணச்சரபம் தவத்திரு. தண்டபாணி சுவாமிகள்<br><br>சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் |
| பதிப்பாசிரியர் | : | பெரும்புலவர். ப.வெ.நாகராஜன் |
| முதல் பதிப்பு | : | 14.07.2008 |
| படிகள் | : | 1000 |
| விலை | : | ரூ. 40.00 |
| வடிவமைத்து அச்சிட்டோர் | : | சௌமி பிரிண்டர்ஸ்<br>69-D, சிறுவாணி மெயின் ரோடு<br>பேரூர், கோவை-641 010.<br>போன் : 98422-52779 |

நூல் கிடைக்குமிடம் :
தலைவர்
சிரவணபுரம் கௌமார மடாலயம்,
சின்னவேடன்பட்டி (அ.நி),
கோவை-641 006.
தொலைபேசி: 2666370.

# ஆசியுரை



சிரவையாதீனகர்த்தர்
***தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்***

அவிநாசித்தலம் பேரூழியிலும் அழியாமல் நிலைநிற்பது; என்றும் விநாசம் இல்லாதது. ஆகவே அவிநாசி எனக் காரணப் பெயர் பெற்றது. சுந்தரமூர்த்தி நாயனார் இத் திருத்தலத்தில் நிகழ்த்திக் காட்டிய அற்புதம் ஈடிணையற்றது. மூன்றாண்டுகளுக்குமுன் முதலைவாய்ப்பட்ட சிறுவனை ஏரியும்வற்றி முதலையும் மறைந்துவிட்ட நிலையில், நீரையும் முதலையையும் வரவழைத்து, மாண்டவனை மூன்றாண்டு வளர்ச்சியுடன் மீண்டுவரச் செய்தது தம்பிரான் தோழரின் பக்திச்சிறப்பு. அது வெளிப்படும் அரும் கருவியாக அமைந்தது ''கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே'' என்னும் தெய்வீகத் திருவாக்கு.

கொங்குநாட்டுத் தேவாரத் தலங்களுள் நடுநாயகமாகிய இந்தத் திருப்புக்கொளியூர் அவிநாசி சிரவையாதீனத்தோடு அதன் தோற்றகாலம் தொட்டே நெருங்கிய தொடர்புடையது. எம் குருநாதர் போற்றுதலுக்குரிய தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள் இத்திருத்தலத்தில் இயற்றிய திருப்பணிகள் கொங்குநாட்டுச் சமய வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்கவை. சுவாமி, அம்மன் சந்நிதிக்குரிய எழுநிலை, ஐந்துநிலை இராசகோபுரங்கள், தீவாய்ப்பட்ட பழைய தேர்களுக்குப் பதிலாக அதே அளவில் நவீன தொழில்நுட்ப உத்திகளுடன் உருவாக்கப்பட்ட இரண்டுதேர்கள் ஆகியன சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை.

சிரவையாதீனத்தின் இரண்டாம் குருமுதல்வரும் கொங்குநாட்டுக் கச்சியப்பர் எனப் போற்றப்படுபவரும் ஆகிய தவத்திரு. கந்தசாமிசுவாமிகள் இத்தலத்தொடர்பாகப் பல தோத்திரப்பனுவல்களை யாத்து வழங்கியுள்ளார். அவர் பல்லாண்டுகளுக்கு முன்பு வாகீசர் மடாலயத்தில் தங்கியிருந்து பெரிய கோயிலில் கந்தபுராண விரிவுரை தொடர்ந்து பலநாட்கள் செய்ததாக அறிகிறோம்.

சிரவணபுரம் கௌமாரமடாலயத்தோடு இவ்வகையில் நெருங்கிய தொடர்புடைய அருள்மிகு அவிநாசிலிங்கேஸ்வரர் திருக்கோயிலில் 14.07.2008 அன்று திருக்குடமுழுக்குப் பெருவிழா நடைபெறுவது பெருமகிழ்ச்சிக்குரிய செயல். இது சிரவையாதீனத்தின் நூற்றாண்டுவிழா ஆண்டாக அமைகிறது. எனவே வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் மற்றும் சிரவையாதீனம் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் ஆகிய இருபெரும் குருநாதர்களால் இயற்றப்பெற்ற பாடல்கள் யாவும் ஒன்றாகத் தொகுக்கப்பட்டு இச்சிரவையாதீனத்தின் தவத்திரு கஜபூசைச்சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையத்தின் வழி வெளியிடப்படுகின்றன. இவற்றுள் பெரும்பாலானவை 1927, 1975, 1988 ஆகிய மூன்றாண்டுகளில் வெளியானவை; சில முதன்முறையாகப் பதிப்பிக்கப்படுகின்றன.

தமிழாய்வு மையச் செயலாளராகிய சிரவையாதீனக் கவிஞர் பெரும்புலவர். ப.வெ.நா. அவர்கள் இதைச் செம்மையாகப் பதிப்பித்துள்ளார். இதுவரை பதிப்பாகாத பாடல்களை பழைய கையெழுத்துப் படிகளிலிருந்து தேடி எடுத்துச் சுவடிக்கலைஞர் திரு. ஆர். கிருஷ்ணராவ் அவர்கள் அளித்திருக்கிறார். இவ்விருவருக்கும் எம் பாராட்டுதல்கள்.

அன்பர்கள் அனைவரும் இத்தோத்திரப் பனுவல்களைப் பக்தியுடன் ஓதிக் குருவருளும் திருவருளும் பெற்று இகபர செள்பாக்கியம் பெற்றுப் பொலிய சிவனார் மனம் குளிர உபதேசம் இரு செவி மீதிலும் பகர் செய் சுவாமிநாதப் பெருமான் தண்ணருள் செய்வாராக.

***கந்தன் அருளால் காசினி தழைக்க!***





# பதிப்புரை

பெரும்புலவர்
*ப.வெ.நாகராஜன்*

கொங்கு நாட்டின் தேவாரத்தலங்களாகப் போற்றப்படுகின்ற ஏழு தலங்களுள் நடுநாயகமாக விளங்குவது அவிநாசி. இத்தலத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் முதலையுண்ட பாலகனை மூன்றாண்டுகள் கழித்து உரிய வளர்ச்சியுடன் மீட்ட அற்புதத்தைக் கூறாத சைவ இலக்கியமே இல்லை எனலாம். காசியில் வாசி அவிநாசி என்பது இந்தப் பகுதியில் வழங்கும் பழமொழி. இங்கு இறைவர் அவிநாசியப்பர் என்ற பெயரிலும், இறைவி பெருங்கருணாம்பிகை என்னும் திருநாமம் தாங்கியும் கோவில்கொண்டுள்ளனர். அம்மன், இறைவனுக்கு வலப்புறத்தில் இருப்பது இந்தத் திருத்தலத்தின் சிறப்புக்களுள் ஒன்றாகும். இந்த ஆலயத்தின் புனிதத்தீர்த்தமாக விளங்கும் கிணறு கங்கை எனவே கருதப்படுகிறது. இந்தத் திருத்தலத்தில் காசியைப் போலவே காலபைரவருக்குச் சிறப்பான ஓரிடம் உண்டு.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினராகிய நாவலாரூரர் காலத்திலேயே இது சிறப்புமிக்க வழிபாட்டுத் தலமாக விளங்கியிருக்கின்றது. தொடக்கத்தில் திருஉண்ணாழியும் [கருவறை] அகப்புறநாழிகள் மட்டும் இருந்திருக்க வேண்டும். நாளடைவில் கொங்குப் பகுதியை ஆண்ட மன்னர்களால் திருக்கோவில் படிப்படியாக வளர்ந்திருக்க வேண்டும். இந்தக் கோயிலில் இராஜகோபுரத்தின் அடிப்பீடம் ஏறக்குறைய 35 அடி உயரம் உள்ளது. கொங்குப்பாண்டியர்களுள் நிறைய ஆலயத் திருப்பணிகளைச் செய்துள்ள சுந்தர பாண்டியன் [கி.பி.1285 - 1300] காலத்தில் பழைய இராஜகோபுரம் கட்டப்பெற்றிருக்கலாம் என வரலாற்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

ஏறக்குறைய ஐந்து நூற்றாண்டுகள் கழிந்த நிலையில் இந்த இராஜகோபுரம் மிகவும் சிதைவுற்று விட்டது. இக்கோபுரம் விழுந்து மக்களுக்கு விபத்தை ஏற்படுத்திவிடலாம் என்று அஞ்சுமளவு சிதைந்து விட்டதால், கி.பி. 1860ல் கோவை மாவட்ட ஆட்சியாளர் ஆணைப்படி, இது அடிப்பீடம்வரை முற்றிலும் இடிக்கப்பட்டுவிட்டது. இதனையடுத்து இந்தக்கோயில் நடுவண் அரசின் தொல்பொருள்

துறையின் பொறுப்பில் இருந்து வந்தது. இந்த நிலையில் வழிபாடு மட்டும் செய்யலாம்; திருப்பணிகள் எதுவும் மேற்கொள்ளலாகாது என்ற கடுமையான கட்டுப்பாடு இருந்து வந்தது. இதனால் அவிநாசித் திருத்தலத்தில் ஒரு நூற்றாண்டுகாலம் எந்தத் திருப்பணியும் நடைபெறவில்லை. மருந்து மட்டும் சாத்தப்பட்டு இருமுறை திருக்குடமுழுக்கு நடைபெற்றதாக தெரிகிறது.

சிரவையாதீனத்தின் மூன்றாவது குருமகாசன்னிதானம் தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள் இந்தநிலையை எப்படியாவது மாற்றி இக்கோயிற்திருப்பணிகள் நடைபெற வேண்டும் எனக்கருதி இருந்தார். இறைவன் திருவருளால் நல்ல நேரம் வாய்த்தது. இப்பகுதியைச் சேர்ந்த கூகலூர். திரு. கே.எஸ். ராமசாமி அவர்கள் இந்திய அமைச்சரவையில் ஒரு துணைஅமைச்சராகப் பொறுப்பேற்றார். அக்காலை, வடநாட்டுத் திருத்தல யாத்திரை மேற்கொண்ட தவத்திரு. சுந்தர சுவாமிகளும், திருப்பேரூராதீனம் தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகளாரும் அமைச்சரைச் சந்தித்து இதுபற்றி எடுத்துரைத்தனர். அமைச்சர் அவர்கள் தொல்பொருள்துறை அமைச்சர் அவர்களை அணுகி, அவிநாசித்திருக்கோயிலை அத்துறைப் பொறுப்பிலிருந்து விடுவித்து தமிழக அரசின் அறநிலையத் துறைக்கு மாற்ற ஆவன செய்தார். இந்த முதற்கட்டப்பணி இறையருளால் கஜபூசைச் சுந்தர சுவாமிகளின் விருப்பப்படி நிறைவேறியவுடன், திருப்பணிக்குழு ஒன்று அமைக்கப்பட்டு, முதலாவதாக எழுநிலை இராசகோபுரம் எழுப்பும் திருப்பணி தொடங்கப்பட்டது. தவத்திரு சுந்தரசுவாமிகள் அவர்களின் புனிதத்தலைமையில் திருப்பணிக்குழுவினர் தளராத முயற்சியுடன் அரும்பணி ஆற்றினர். திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவர்கள் கஜபூசைச் சுவாமிகளோடு இணைந்து இந்தத் திருப்பணிகளுக்காகச் செய்த நற்பணிகள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்கவை.

பொதுமக்கள் மிகப்பலருடைய உற்சாகமான ஒத்துழைப்பால், எழுநிலை இராசகோபுரத் திருப்பணி செம்மையாக நிறைவுற்றது. உடனே, தனிப்பட்ட சிலரின் சொந்தப் பொறுப்பில் அவிநாசியப்பர் விமானம், பெருங்கருணையம்மன் விமானம், நிருதி விநாயகர் திருக்கோயில், பைரவர் விமானம், தென்முகக்கடவுள் விமானம், பள்ளியறை முதலியனவும் நன்கு நிறைவேறின. ஊர்ச்சாலையையும் திருக்கோயில் வளாகத்தையும் இணைக்கும் நள்ளாற்றுப்பாலம்

பெரும்பொருட் செலவில் கட்டி முடிக்கப்பட்டது. ஒரு நூற்றாண்டு காலத்திற்கும்மேல் திருப்பணியையே கண்டிருக்காத பெருங்குறை நீங்க இத்திருப்பணிகள் மிகச் சிறப்பானவையாக அமைந்தன. இந்தப் பெரிய திருப்பணிகள் எல்லாம் நன்கு நிறைவேறியவுடன், 28.01.1980 அன்று திருக்குட நீராட்டுப் பெருவிழா வெகுவிமரிசையாக நடைபெற்றது.

தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள் மேற்கொண்ட இந்த ஆலயத்திருப்பணிக்கு இணையான சிறப்பு வாய்ந்த மற்றொரு பெரும்பணி திருத்தேர்த் திருப்பணி ஆகும். இவ்வாலயத்தில் இறைவன், இறைவி இருவருக்கும் இரண்டு தேர்கள் இருந்தன. சுவாமியின் தேர்தான் கொங்குநாட்டுத் தேர்களிலேயே மிகப்பெரியது. பழைய தேர் மைசூர் மகாராசாவால் திருப்பணி செய்யப்பட்டது எனக் கூறுவர். அது 1900ஆம் ஆண்டுவாக்கில் கீழே விழுந்துவிட்டது. அதனால் வேறு ஒரு புதிய தேர் செய்ய வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டு விட்டது. அவிநாசி பெரியகோவில் பஞ்சாங்க ஊழியம் ராஜபுரோஹிதம் கிருஷ்ண அய்யர் என்பவரால் தேரின் அடிப்பாகமும், ஏனைய பகுதிகள் வேட்டுவபாளையம் பூசாரிக்கவுண்டர் என்பவராலும் செய்யப்பட்டன. அவிநாசியில் இடையீடே இல்லாமல் தேரோட்டம் தொடர்ந்து நடைபெறுவது பெருமைக்குரிய ஒன்று ஆகும்.

இவ்வாறு புதிதாகச் செய்யப்பட்ட தேரும், அம்மன் தேரும் 23.11.1990 நள்ளிரவில் எரிந்துபோய்விட்டன என்றாலும் அவிநாசித் திருத்தல அடியார்கள் மனம்தளராமல் கஜபூசைச் சுவாமிகளின் தலைமையின்கீழ் ஒன்றுபட்டு ஏறக்குறைய ஐம்பதுலட்சம் ரூபாய் செலவில் பழைய தேரின் அதே அளவு, அதே உயரத்தில் சிற்ப வேலைப்பாடுகளுடன், மரச்சக்கரங்களுக்குப் பதிலாக இரும்புச்சக்கரங்களும், வேகத்தைக் கட்டுப்படுத்த ஹைட்ராலிக் பிரேக் அமைப்பும் கொண்டதாகப் புதிய தேர்களைச் செய்து, 28.01.1993, 23.03. 1994 ஆகிய தேதிகளில் வெள்ளோட்டம் விட்டனர்.

இவ்வாறு அவிநாசித் திருத்தலத்திற்கும் சிரவணபுரம் கௌமார மடாலயத்திற்கும் நெருங்கிய தொடர்புள்ளது. தவத்திரு. சுந்தரசுவாமிகளுக்கு முன்பே சிரவையாதீனத்தின் இரண்டாம் குருமகாசன்னிதானமாகிய தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் திருநாவுக்கரசர் திருமடத்தில் தங்கியிருந்து பெரிய கோவிலில் கந்தபுராண விரிவுரை தொடர்ந்து பலநாட்கள் நிகழ்த்தியதாகத்

தெரிகிறது. இவற்றையெல்லாம் பார்க்கும்போது சிரவையாதீனத்தின் தொடக்கத்திலிருந்தே அவிநாசித் தலத் தொடர்பு ஒரு நூற்றாண்டுகாலமாகத் தொடர்ந்து வருகின்றது என விளங்கும். இதன் பயனாகத்தான் அவிநாசிலிங்கேசுவரரும், கருணாம்பிகையும் கௌமார மடாலயத்திலேயே திருக்கோயில் கொண்டு நிலையாக எழுந்தருளி அருள்பாலிக்கின்றனர் போலும்.

சிரவையாதீனத்தின் நூற்றாண்டு விழா ஆண்டு ஆகிய இந்த 2008ல் அவிநாசிலிங்கேசுவரர் ஆலயத் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெறுவதையொட்டிக் கௌமார மடாலயத்தைச் சேர்ந்த தவத்திரு. கஜபூசைச் சுந்தர சுவாமிகள் தமிழாய்வு மன்றத்தின் சார்பில், இந்த அவிநாசி அருள்தமிழ் என்னும் இலக்கியத் தொகுப்பை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

இத்தொகுப்பில் பன்னிரு திருமுறைகளில் அவிநாசித் திருப்பாடல்களும், அருணகிரிநாதரின் திருப்புகழ்ப்பாக்களும் முதலில் தரப்பெற்றுள்ளன. தொடர்ந்து வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளாலும், சிரவைக் கந்தசாமி சுவாமிகளாலும் இயற்றப்பட்ட தோத்திரங்கள் யாவும் தொகுக்கப்பட்டுள்ளன. அவிநாசித்தலத்திற்கு நிறையச் சிற்றிலக்கியங்கள் உள்ளன. அவற்றுள் இப்பதிப்பாசிரியரின் அறிவிற்கு எட்டிய நூல்களைப் பற்றிய செய்திகள் மட்டும் இந்தப் பதிப்புரையை அடுத்துப் பட்டியலிடப்பட்டுள்ளன. தமிழகத்தில் உள்ள திருத்தலங்கள் எல்லாம் அந்த அந்தத் தலத் தொடர்புள்ள இலக்கியங்கள் அனைத்தையும் தொகுத்து நல்லபதிப்பாக வெளியிடுவதற்குரிய நன்னாள் அருள்மிகு பெருங்கருணாம்பிகை உடனமர் அவிநாசிலிங்கேசுவர் திருவருளால் விரைவில் வரவேண்டும்.

இனி இப்பதிப்பில் இடம்பெற்றுள்ள பனுவல்களைப் பற்றி நோக்குவாம். இதில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பட்டுள்ள நான்கு பதிகங்கள் இடம்பெற்றள்ளன. இவற்றில் அவிநாசிலிங்கேசுவரைப் போற்றும் முதல் மூன்று பதிகங்களும் முதன்முதலாக 1980ஆம் ஆண்டு நிகழ்ந்த அவிநாசியப்பர் திருக்குடமுழுக்கு விழா மலரில் அச்சாகியுள்ளன. அடுத்து இப்பொழுதுதான் அவை பதிப்பு வெளிச்சம் பெறுகின்றன.

நான்காவது பதிகம் கரிவரதராசப் பெருமாளைப் போற்றுவது. இந்தப்பதிகம் இதுவரை அச்சுவாகனம் ஏறாமல் இப்பொழுதுதான்

முதன்முறையாக வெளியாகிறது. இதில் திருமால் தொடர்பான பல வரலாறுகள் இடம்பெற்றுள்ளன.

இவற்றைத் தொடர்ந்து சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் அவிநாசிப்பனுவல்கள் அனைத்தும் இடம்பெற்றுள்ளன. அவை விநாயகர் திருப்புகழ், முருகவேள் திருப்புகழ், அவிநாசியப்பர் விண்ணப்பம், கருணாம்பிகையம்மன் பதிகம், கருணாம்பிகை மாலை, கருணாம்பிகை யமகவந்தாதி மூலமும் உரையும், கருணாம்பிகைத் திருப்புகழ்ப்பஞ்சகம், திருநாவுக்கரசர் மடாலய விநாயகர் பதிகம், திருநாவுக்கரசர் மடாலயத் திருப்புகழ் என்ற ஒன்பது துதிப்பனுவல்கள் அடங்கும். இவற்றுள் முதல் ஏழு நூல்களும் முதல் பதிப்பாக 1927ல் சிரவைக் கௌமார சபையால் பதிப்பிக்கப்பட்டன. அதில் கருணாம்பிகை யமகஅந்தாதி மூலம் மட்டும் உள்ளது. அடுத்துக் கருணாம்பிகை மாலை மட்டும் 1975ம் ஆண்டு அவிநாசி மணிவாசகர் அச்சக உரிமையாளர் சைவத்திரு. சண்முகசுவாமிகள் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது.

தொடர்ந்து கருணாம்பிகையம்மன் யமக அந்தாதி பெரும்புலவர் திரு. ப.வெ.நாகராஜன் அவர்களின் தெளிவான உரையுடன் 1988ஆம் ஆண்டு அவிநாசி திரு. பி.கே. கந்தசாமிக்கவுண்டர் அவர்கள் உதவியால் சிரவைக் கௌமார சபை வெளியீடாக வெளியாயிற்று.

திருநாவுக்கரசர் மடாலய விநாயகர் பதிகமும், இரு திருப்புகழ்ப்பாக்களும் இப்பொழுதுதான் முதன்முறையாக வெளியாகிறது. கௌமார மடாலயத்தின் பழைய கையெழுத்துச் சுவடிகளைத் தேடிச் சுவடிக்கலைஞர் திரு. ஆர். கிருஷ்ணராவ் அவர்கள் அண்மையில்தான் இவற்றைக் கண்டெடுத்தார். ஆக இந்தப்பதிப்பில் அவிநாசியைப்பற்றிய சிரவையாதீனம் தவத்திரு.கந்தசாமி சுவாமிகள் அவர்களின் படைப்புக்கள் அனைத்தும் - இன்றுவரை அறியப்பட்டவை முழுவதும் - முறையாகத் தொகுப்பட்டுள்ளன.

சிரவணபுரம் கௌமார மடாலயத்தின் நூற்றாண்டுவிழா ஆண்டில் நிகழ்கின்ற அவிநாசிலிங்கேசுவரர் ஆலயத் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும், தேவத்திரு. கந்தசாமி சுவாமிகளும் இயற்றியருளிய தோத்திரப் பனுவல்கள் வெளியாவது மிகப்பொருத்தமானதாகும். இது தவத்திரு கஜபூசைச்

சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையப் பதிப்பாக அமைவது அப்புனிதரின் திருவுள்ளத்திற்கு மிக உகப்பான ஒன்று என்பது உறுதி.

சிரவையாதீனகர்த்தரும், தமிழாய்வு மையத்தலைவருமாகிய தவத்திரு. குமரகுருபர சுவாமிகள் அவர்கள்தான் இப்பதிப்பு வெளிவர முதற்காரணமானவர். அவருக்கு முதற்கண் என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பதிகங்கள், தவத்திரு. சிரவைக் கந்தசாமி சுவாமிகளின் இதுவரை வெளிவராத பாடல்கள் ஆகியவற்றை அழகாகப் படியெடுத்துக் கொடுத்த சுவடிக்கலைஞர் திரு. ஆர். கிருஷ்ணராவ் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

செளமி பிரிண்டர்ஸ் திரு. திருஞானசம்பந்தம் அவர்கள் எந்தப் பதிப்பை எடுத்துக் கொண்டாலும் செய்வன திருந்தச் செய் என்பதைத் தவறாமல் கடைப்பிடிப்பவர். திருமடத்தோடு நெருங்கிய தொடர்புடையவர். அவர் இந்தத் தோத்திரத் திரட்டை மிகக்குறுகிய கால அவகாசத்தில் மிக அழகாக நிறைவேற்றிக் கொடுத்துள்ளார். அதற்காக அவருக்கும், செளமி அச்சகத்தைச் சார்ந்த அனைவருக்கும் என் நன்றியையும் நல்வாழ்த்துக்களையும் உரித்தாக்கி மகிழ்கின்றேன்.

*சுந்தர சாமி உவக்கின்ற மாக்கதை தோன்றுதற்கு*
*முந்துறு நூல்திருத் தொண்டத் தொகைதரு முற்றறிஞன்*
*சுந்தர மூர்த்தியின் கீர்த்தியைக் காட்டிடும் தொல்பதிதான்*
*அந்தரர் போற்றும் அவிநாசி என்னும் அருட்பதியே*

*அப்பதிக் கோயிலின் நின்றருள் பாலிக்கும் ஆண்டவர்சீர்*
*செப்பும் பனுவற் றொகைகளுள் வண்ணச் செழுஞ்சரபர்,*
*ஒப்பில் சிரவை வளர்கந்த சாமி உயர்புனிதன்*
*தப்பிலா வாக்கின் றிரட்டா யவிர்ந்து தழைப்பதிதே*

**14.07.2008** **ப.வெ.நாகராஜன்**

**கெளமார மடாலயம்**

## அவிநாசியைப் போற்றும் அருந்தமிழ்ப் பனுவல்கள்

1. தேவாரம் – சுந்தரமூர்த்தி நாயனார் ஏழாம் திருமுறை, 92ஆம் பதிகம், பல பதிப்புகள் கண்டுள்ளன.

2. அவிநாசித் தலபுராணம் – இளையான் கவிராயர், மூலம் மட்டும் ஒருபதிப்பும், மூலமும் உரையுமாக இரு பதிப்புகளும் வெளிவந்துள்ளன. அண்மைக்காலப்பதிப்பு, 1998 திருக்கோயில் வெளியீடு

3. கருணாம்பிகைப் பிள்ளைத்தமிழ் – வாசுதேவநல்லூர் முத்துசாமிக்கவிராயர் என்னும் கருணைதாசர். கரும்புலவர் எனவும் அழைக்கப்படுவார். பதிப்பு விவரம் தெரியவில்லை. திரு. வே. இரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் அவர்கள் தம் கருணையந்தாதிப் பதிப்பில் கூறியுள்ளார் [ப.4]

4. கருணாம்பிகைப் பிள்ளைத்தமிழ் – சிவக்கவிமணி. சி.கே.சுப்பிரமணிய முதலியார். ஆசிரியராலேயே ஒரு முறை பதிப்பிக்கப்பட்டுள்ளது.

5. கருணாம்பிகை சதகம் – செட்டிபாளையம் மகாவித்துவான் வாசுதேவ முதலியார், பதிப்பு விவரம் தெரியவில்லை.

6. கருணையந்தாதி – வாசுதேவ நல்லூர் முத்துசாமிக்கவிராயர் என்னும் கருணைதாசர், வித்துவான் வே. ரா.தெய்வசிகாமணிக்கவுண்டர் பதிப்பு1975

7. கருணாம்பிகை யமகவந்தாதி – 30 பாடல்கள், சிரவைக் கந்தசாமி சுவாமிகள். உரை – பெரும்புலவர் ப.வெ.நாகராஜன், மூலம் மட்டும் முதற் பதிப்பு 1927, மூலமும் உரையும் முதற்பதிப்பு 1988, இத்தொகுப்பில் இரண்டாம் பதிப்பு.

8. புக்கொளி மாலை – கருணைதாசர்.புக்கொளிப்பதியில் வளர் பெருங் கருணைநாயகியே என்னும் மகுடம். 100 எழுசீர் விருத்தம், பதிப்பு விவரம் தெரியவில்லை. கருணையந்தாதி தரும் செய்தி.

9.கருணாகர மாலை – கருணைதாசர் கருணாகர உத்தமியே மகுடம். கட்டளைக்கலித்துறை, பதிப்பு விவரம் தெரியவில்லை. 1980 இல் வெளியான திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா மலரில் இரண்டு பாடல்கள் தரப்பட்டுள்ளன.

10. கருணாம்பிகை மாலை – சிரவைக் கந்தசாமி சுவாமிகள் 100 கட்டளைக் கலித்துறை; முதற்பதிப்பு 1927; இரண்டாம் பதிப்பு 1975; இத்தொகுப்பில் மூன்றாம் பதிப்பு

11. அவிநாசி உலா – வடவழி அருணாசலக்கவிராயர், பதிப்பு விவரம் தெரியவில்லை.

12. அவிநாசி நாதர் உலா – பவானி. கு. குமாரசாமி பிள்ளை, 514 கண்ணிகள், அச்சானதாகத் தெரியவில்லை. நூலாசிரியரின் மைந்தரும் கூனம்பட்டி ஆதீன வித்துவானும் ஆகிய பாவலர். குமார. ஞானசம்பந்தன் அவர்கள் காட்ட இப்பதிப்பாசிரியர் 1980இல்கையெழுத்துப்படியைப் பார்த்திருக்கிறார்.

13. அவிநாசிநாதர் நெஞ்சுவிடு தூது - ஆசிரியர், பதிப்பு விவரம் தெரியவில்லை. முனைவர். இரா. கண்ணன் அவர்களின் சிற்றிலக்கிய ஆராய்ச்சி என்னும் நூலில் இரண்டாம் பகுதியில் 129ஆம் பக்கத்தில் 17ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் காட்டப்பட்டுள்ளது.

14. அவிநாசிநாதர் திருப்பள்ளியெழுச்சி - சாவற்கட்டுப்பாளையம் இராமநாத நாயுடு. குடமுழுக்கு விழாமலரில், இரு பாடல்கள் உள. முழுவிவரம் தெரியவில்லை.

15. கருணாம்பிகை கீர்த்தனை - வாசுதேவநல்லூர் கருணைதாசர். நூல், பதிப்பு விவரம் தெரியவில்லை. கருணையந்தாதி தரும் செய்தி.

16. கருணாம்பிகை இசைப்பாக்கள் - கோவை கவியரசு கு. நடேச கவுண்டர். திருக்குட முழுக்குவிழா மலரில் ஆறு கீர்த்தனைகள் உள.

17. அவிநாசியுடையார் திருப்பதிகம்
18. அவிநாசியரன் பதிகம்
19. புக்கொளியூர்ப் புனிதன் பதிகம்

] வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் குடமுழுக்கு விழாமலரில் முழுமையாக உள இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

20. அவிநாசிப் பெருமாள் பதிகம் - வண்ணச்சரபம் தண்டாபணி சுவாமிகள். முதன்முறையாக இப்பொழுதுதான் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

21. அவிநாசிப்பத்து - அப்பாசாமிகள், முழு விவரம் தெரியவில்லை. முனைவர். ந.வீ. செயராமன் தம் சிற்றிலக்கிய ஆராய்ச்சி என்னும் நூலில் 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகப் பெயரளவில் குறிப்பிட்டுள்ளார்.

22. பெருங் கருணாம்பிகைப்பதிகம்-கோவை வித்துவான் கந்தசாமி முதலியார் குடமுழுக்கு விழாமலரில் இரு பாடல்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

23. அவிநாசிநாதர் அடிமடக்குப் பதிகம் - நெகமம் வித்துவான் முத்துநாகப்ப முதலியார் குடமுழுக்கு விழாமலரில் இருசெய்யுள்கள் இடம்பெற்றுள்ளன.

24. அவிநாசியப்பர் விண்ணப்பம்
25. கருணாம்பிகைப் பதிகம்
26. கருணாம்பிகைத் திருப்புகழ்ப்பஞ்சகம்
27. அவிநாசித்தலத் திருப்புகழ்ப்பாக்கள்

] சிரவைக் கந்தசாமி சுவாமிகள் முதற்பதிப்பு 1927 இரண்டாம் பதிப்பு இத்தொகுப்பில்

28. திருநாவுக்கரசர் மடாலய விநாயகர் பதிகம்
29. திருநாவுக்கரசர் மடாலயத் திருப்புகழ்ப்பாக்கள்

] சிரவைக் கந்தசாமி சுவாமிகள். இப்பொழுதுதான் முதன்முறையாக இத்தொகுப்பில் வெளிவருகின்றன.

தொகுப்பு : பெரும்புலவர். ப. வெ. நாகராஜன்



தவத்திரு. கஜபூசைச் சுந்தர சுவாமிகள்

# பொருளடக்கம்

# அவிநாசித் திருமுறைகள்

**திருநாவுக்கரசு சுவாமிகள்**
**தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

*அணவரியான் கண்டாய் அமலன் கண்டாய்*
*அவிநாசி கண்டாய் அண்டத்தான் கண்டாய்*
*பணமணிமா நாக முடையான் கண்டாய்*
*பண்டரங்கன் கண்டாய் பகவன் கண்டாய்*
*மணல்வருநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்*
*மாதவற்கும் நான்முகற்கும் வரதன் கண்டாய்*
*குணமுடைநல் லடியார்வாழ் கொட்டையூரிற்*
*கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.*
(தேவாரம் 6-73-7)

**சுந்தரமூர்த்தி சுவாமிகள்**
அருளிச் செய்த
**திருப்புக்கொளியூர் அவிநாசித் திருப்பதிகம்**

*எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு மானையே*
*உற்றாய்என் [று]உன்னையே உள்குகின் றேன் உணர்ந் [து]*
*உள்ளத்தால்*
*புற்றா டுஅரவா! புக்கொளி யூர் அவிநாசியே!*
*பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே*

*வழி போவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாமணிநீ!*
*ஒழிவ தழகோசொல் லாய் அருள் ஓங்கு சடையானே!*
*பொழில்ஆருஞ் சோலைப் புக்கொளி யூரில் குளத்திடை*
*இழியாக் குளித்த மாணி எனைக்கிறி செய்ததே.*

*எங்கேனும் போகினும் எம்பெரு மானை நினைந்தக்கால்*
*கொங்கே புகினும் கூறைகொண் டாறலைப் பாரிலை*
*பொங்கு ஆடு அரவா! புக்கொளி யூர் அவிநாசியே!*
*எங்கோ னே! உனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே.*

உரைப்பார்உரை உகந் துஉள்கவல் லார் தங்கள் உச்சியாய்!
அரைக்கு ஆடு அரவா! ஆதியும் அந்தமும் ஆயினாய்!
புரைக்காடு சோலைப்புக்கொளி யூர்அவி நாசியே!
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.

அரங்குஆவ துஎல்லாம் மாஇடு காடுஅது அன்றியும்
சரங்கோலை வாங்கி வரிசிலை நாணியிற் சந்தித்துப்
புரங்கெட எய்தாய்! புக்கொளி யூர்அவி நாசியே!
குரங்கு ஆடு சோலைக் கோயில் கொண்டகுழைக் காதனே!

நாத்தா னும்உனைப் பாடல்அன் றிநவி லாதுஎனாச்
சோத்தென்று தேவர் தொழநின்ற சுந்தரச் சோதியாய்!
பூத்தாழ் சடையாய்! புக்கொளி யூர்அவி நாசியே!
கூத்தா! உனக்குநா ன்ஆட்பட்ட குற்றமும் குற்றமே.

மந்தி கடுவனுக்குஉணப்பழம் நாடி மலைப்புறஞ்
சந்திகள் தோறும் சலபுட்ப ம்இட்டு வழிபடப்
புந்தி உறைவாய்! புக்கொளி யூர்அவி நாசியே!
நந்தி உனை வேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே!

பேணாது ஒழிந்தேன் உன்னை அல்லால்பிற தேவரைக்
காணாது ஒழிந்தேன் காட்டுதி யேல்இன்னம் காண்பன்நான்
பூண்நாண் அரவா! புக்கொளி யூர்அவி நாசியே!
காணாத கண்கள் காட்டவல் லகறைக் கண்டனே.

நள்ளாறு தெள்ளாறு அரத்துறை வாய்! எங்கள் நம்பனே!
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் தோலை விரும்பினாய்
புள்ஏறு சோலைப் புக்கொளி யூரில் குளத்திடை
உள் ஆடப் புக்க மாணி எனைக்கிறி செய்ததே.

நீர்ஏற ஏறுநிமிர் புன்சடை நின்மல மூர்த்தியைப்
போர்ஏறு அது ஏறியைப் புக்கொளி யூர்அ விநாசியைக்
கார் ஏறு கண்டனைத் தொண்டன் ஆரூரன் கருதிய
சீர்ஏறு பாடல்கள் செப்பவல் லார்க்கு இல்லை துன்பமே.

(தேவாரம் 7-32)

## திருவாசகம்

நரியைக் குதிரைப் பரிஆக்கி ஞாலம் எல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரை எல்லாம் பிச்ச துஏற்றும் பெருந்துறையாய்!
அரிய பொருளே! அவிநாசி அப்பா! பாண்டி வெள்ளமே!
தெரிய அரிய பரஞ்சோதீ! செய்வது ஒன்றும் அறியேனே. [50-7]

## திருத்தொண்டர் திருவந்தாதி

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக்குஉயிர்அன்று புக்கொளியூ ர்த்
தொடுத்தான் மதுர கவிஅவி நாசியை ; வேடர்சுற்றம்
படுத்தான் திருமுரு கன்பூண் டியினில்; பராபரத்தேன்
மடுத்தான் அவன் என்பர் வன்றொண்டன்ஆகின்ற மாதவனே. [63]

## பெரியபுராணம் - வெள்ளானைச் சருக்கம்

மைந்தன் றன்னை யிழந்த துயர் மறந்து நான்வந் துஅணைந்ததற்கே
சிந்தை மகிழ்ந்தார் மறையோனும் மனைவிதானும்; சிறுவனையான்
அந்த முதலை வாய்நின்றும் அழைத்துக் கொடுத்தே அவிநாசி
எந்தை பெருமான் கழல்பணிவேன் என்றார் சென்றார் இடர்களைவார்

இவ்வா றுஅருளிச் செய்தருளி இவர்கள் புதல்வன் றனைக் கொடிய
வெவ்வாய் முதலை விழுங்கும் மடு எங்கே யென்று வினவிக்கேட்டு
அவ்வாழ் பொய்கைக் கரையில்எழுந் தருளி அவனை அன்றுகவர்
வைவ்வா ள்எயிற்று முதலை கொடு வருதற்கு எடுத்தார் திருப்பதிகம்

உரைப்பா ர்உரைஎன் றுஎடுத்ததிருப் பாட்டு முடியா முன்உயர்ந்த
வரைப்பான் மையின் நீள் தடம்புயத்து மறலி மைந்தன்உயிர் கொணர்ந்து
திரைப்பாய் புனலின் முதலைவயிற் றுஉடலில் சென்ற ஆண்டுகளும்
தரைப்பால் வளர்ந்தது எனநிரம்ப முதலை வாயில் தருவித்தான்

பெருவாய் முதலை கரையின்கண் கொடுவந் துஉமிழ்ந்த பிள்ளைதனை
உருகா நின்ற தாய்ஓடி எடுத்துக் கொடுவந் துஉயிர்அளித்த
திருவாளன்றன் சேவடிக்கீழ்ச் சீல மறையோ னொடுவீழ்ந்தாள்
மருவார் தருவின் மலர்மாரி பொழிந்தார் விசும்பில் வானோர்கள்.



# திருப்புகழ்

1. இறவாமற் பிறவாமல் எனையாள்சற் குருவாகிப்
பிறவாகித் திரமான பெருவாழ்வைத் தருவாயே;
குறமாதைப் புணர்வோனே! குகனே சொற் குமரேசா!
அறநாலைப் புகல்வோனே! அவிநாசிப் பெருமாளே!

2. பந்தப்பொற் பாரப யோதர
முந்திச்சிற் றாடைசெய் மேகலை
பண்புற்றுத் தாளொடு வீசிய துகிலோடே
பண்டெச்சிற் சேரியில் வீதியில்
கண்டிச்சித் தாரொடு மேவிடு
பங்குக்கைக் காசுகொள் வேசையர் பனிநீர்தோய்
கொந்துச்சிப் பூவணி தோகையர்
கந்தக்கைத் தாமரை யாலடி
கும்பிட்டுப் பாடிசை வீணையர் அநுராகங்
கொண்டுற்றுப் பாயலின் மூழ்கினும்
மண்டிச்செச் சேயென வானவர்
கொஞ்சுற்றுத் தாழ்பத தாமரை அருள்வாயே
அந்தத்தொக் காதியும் ஆதியும்
வந்திக்கத் தானவர் வாழ்வுறும்
அண்டத்துப் பாலுற மாமணி ஒளிவீசி
அங்கத்தைப் பாவைசெய் தாம்என
சங்கத்துற் றார்தமிழ் ஓதவும்
அண்டிக்கிட் டார்கழு வேறிட ஒருகோடிச்
சந்தத்திக் காளுநி சாசரர்
வெந்துட்கத் தூளிப டாமெழ
சண்டைச்செற் றார்படவே அயில் விடுவோனே
தங்கச்செக் கோலசை சேவக
கொங்கிற்றொக் கார்அவி நாசியில்
தண்டைச்சிக் காரயில் வேல்விடு பெருமாளே!

3. மனத்தி ரைந்தெழும் ஈளையும் மேலிட
கறுத்த குஞ்சியு மேநரை ஆயிட
மலர்க்கண் அண்டிருள் ஆகியு மேநடை தடுமாறி
வருத்த முந்தர தாய்மனை யாள்மக
வெறுத்தி டங்கிளை யோருடன் யாவரும்
வசைக்கு றுஞ்சொலி னால்மிக வேதினம் நகையாட
எனைக்க டந்திடு பாசமு மேகொடு
சினத்து வந்தெதிர் சூலமு மேகையில்
எடுத்தெ றிந்தழல் வாய்விட வேபயம் உறவேதான்
இழுக்க வந்திடு தூதர்கள் ஆனவர்
பிடிக்கும் முன்புன தாள்மல ர்ஆகிய
இணைப்ப தந்தர வேமயில் மீதினில் வரவேணும்
கனத்த செந்தமி ழால்நினை யேதினம்
நினைக்க வுந்தரு வாய்உன தார்அருள்
கருத்தி ருந்துறை வாய்என தாருயிர் துணையாகக்
கடற்ச லந்தனி லேஒளி சூரனை
உடற்ப குந்திரு கூறென வேஅது
கதித்தெ ழுந்தொரு சேவலு மாம்அயில் விடும்வேலா;
அனந்த னுங்கம லாலய மீதுறை
திருக்கலந்திடு மால்அடி தேடிய
அரற்க ரும்பபொருள் தான்உரை கூறிய குமரேசா
அறத்தை யுந்தரு வோர்கன பூசுரர்
நினைத்தி னந்தொழு வாரம ராய்புரி
அருட்செ றிந்தவி நாசியுள் மேவிய பெருமாளே

4. பக்குவ ஆசார லட்சண சாகாதி
பட்சண மாமோன சிவயோகர்
பத்தி யில்ஆறாறு தத்துவ மேல்வீடு
பற்றுநி ராதார நிலையாக
அக்கண மேமாய துர்க்குணம் வேறாக
அற்புத மாஞான உபதேசம்
அக்கற வாய்பேசு சற்குரு நாதா!உன்
அற்புத சீர்பாதம் மறவேனே;

உக்கிர ஈர் ஆறு மெய்ப்புய னேநீல
உற்பல வீராசி மணம்நாற
ஒத்தநி லாவீசும் நித்தில நீராவி
உற்பல ராசீவ வயலூரா!
பொக்கம் இலாவீர விக்ரம மாமேனி
பொற்ப்ரபை ஆகார அவிநாசிப்
பொய்க்கலி போமாறு மெய்க்கருள் சீரான
புக்கொளி யூர்மேவு பெருமாளே!

5. மதப்பட்டவி சாலக போலமும்
முகப்பிற்சன வாடையும் ஓடையும்
மருக்கற்புர லேபன லாடமும் மஞ்சைவாரி
வயிற்றுக்கிடு சீகர பாணியும்
மிகற் செக்கர்வி லோசன வேகமும்
மணிச்சத்தக டோரபு ரோசமும் ஒன்றுகோல
விதப்பட்டவெ ளானையில் ஏறியும்
நிறைக்கற்பக நீழல்உலாவியும்
மினுக்குப்பெறு சூளிகை மாளிகை இந்த்ரலோகம்
விளக்கச்சுரர் சூழ்தர வாழ்தரு
பிரப்புத்வகு மாரசொ ரூபக
வெளிப்பட்டெனை யாள்வய லூரில்இ ருந்தவாழ்வே;
இதப்பட்டிட வேகம லாலய
வொருத்திக்கிசை வானபொ ன்ஆயிரம்
இயற்றப்பதி தோறும் உலாவிய தொண்டர்தாள
இசைக் கொக்கவி ராசத பாவனை
உளப்பற்றொடு பாடிட வேடையில்
இளைப்புக்கிட வார்மறை யோன் என வந்துகானில்
இதப்பட்டெதி ரேபொதி சோறினை
அவிழ்த்திட்டவி நாசியி லேவரு
திசைக்குற்றச காயனு மாகிம றைந்துபோமுன்
செறிப்பித்தக ராவதின் வாய்மகவு
அழைப்பித்தபு ராணக்ரு பாகர
திருப்புக்கொளி யூருடை யார்புகழ் தம்பிரானே!

6. வனப்புற் றெழுகேதம்! மேவு கோகிலம்
அழைக்கப் பொருமார ன்ஏஅது ஆம்
மருத்துப் பயில்தேரி ல்ஏறி மாமதி தொங்கலாக
மறுத்துக் கடல்பேரி மோத வேஇசை
பெருக்கப் படைகூடி மேல்எழா அணி
வகுத்துக்கொடு சேமமாக மாலையில் வந்துகாதிக்
கனக்கப் பறைதாய ளாவ நீள்கன
கருப்புச்சிலை காமர் ஓவில் வாளிகள்
களித்துப்பொர வாசம்வீசு வார்குழல் மங்கைமார்கள்
கலைக்குட் படுபேத மாகி மாயும்அது
உனக்குப் ரியமோக்ரு பாக ரா! இது
கடக்கப்படும் நாமம் ஆன ஞானம தென்றுசேர்வேன்!
புனத்திற்றினை காவலான காரிகை
தனப்பொற்குவ டேயும் மோக சாதக
குனித்தப்பிறை சூடும் வேணி நாயகர் நன்குமாரா!
பொறைக்குப்புவி போலும் நீதி மாதவர்
சிறக்கத்தொகு பாசி சோலை மாலைகள்
புயத்துற்றணி பாவ சூரனார்உயிர் கொண்டவேலா!
சினத்துக்கடி வீசி மோது மாகடல்
அடைத்துப்பிசி தாச னாதி மாமுடி
தெறிக்கக்கணை ஏவும் வீர மாமனும் உந்திமீதே
செனித்துச் சதுர்வேதம் ஓது நாவனும்
மதித்துப்புகழ் சேவ கா! வி ழாமலி
திருப்புக்கொளி யூரில் மேவு தேவர்கள் தம்பிரானே!



# வன்னச்சரபர் வண்டமிழ்ப் பதிகங்கள்

## 1. அவிநாசியுடையார் திருப்பதிகம்

### (காப்பு வெண்பா)

*அகல்வாய் முதலைஉண்ட அந்தணச்சேய் தன்னை*
*இகலோகத் தோர்அறிய ஈந்து-பகல்மதிதீ*
*கண்ணாக நின்ற கடவுள்அவி நாசியினை*
*எண்ணா மகிழ்கின்றேன் யான்*

### நூல்

[கொச்சகக் கலிப்பா]

*பரவுஆர்வ மதனூடே பழகாத புலவோர்போல்*
*இரவுஆதி யவைதோய்வேன் இயல்சூட விழையீரோ?*
*கரவாள ரிடைவாழீர்! கயிலாய வரைஆள்வீர்!*
*அரவுஆரம் அணிதோளீர்! அவிநாசி உடையாரே!* 1

*துணிவுஏதும் அறியாதார் துயர்கோடி உறும்நாயேன்*
*அணிமாதி பெறுமாறுஓர் அநுபூதி அருளீரோ?*
*மணிமாயன் விழிஓவா மலர்போலும் இருதாளீர்!*
*அணிநீறு மலிமேலீர்! அவிநாசி உடையாரே!* 2

*படநாகம் நிகர்தீயோர் பழிகூற உலகூடே*
*கடனாலும் மெலிவேன்வாய் கவிபாடில் அணியீரோ?*
*மடமானை அனையார்ஆள் மனைதோறும் உறநாணீர்*
*அடல் ஆர்வெள் விடை ஊர்வீர்! அவிநாசி உடையாரே!* 3

*ஒருநாவ லவன்மேனாள் உமைநாடி நுவல்பாவால்*
*இருஞால மிசை ஓர்சே யினைஈகை பிழையாமோ?*
*தருநாடு கொளும்வானோர் தமர்சூழ வரும்வாழ்வீர்!*
*அருளாடல் மலிசீர்ஆர் அவிநாசி உடையாரே!* 4

*இடர்மீறி மெலிவானேன் எனைஆள நினையாதே*
*விடல்பாவம்; அருள்வீரேல் வினைநாசம் அடையாதோ?*
*கடல்ஆலம் நுகர்வாயீர்! கருவேழ உரிதோய்வீர்!*
*அடர் சோலை வளம் ஓவா அவிநாசி உடையாரே!* 5

பொழிபாடல் நலம்ஓரார் பொருள்ஆவல் கொடுசோர்வேன்
விழி நேரில் விடைமேல் நீர் மிளிர்காலம் உதியாதோ?
வழிபாடு செயும்மேலோர் மனஆசை முழுதுஈவீர்!
அழியாத முதல்ஆனீர்! அவிநாசி உடையாரே! 6

மறம்மேவும் இகலோரால் மருள்பாவம் அறவீணாய்
இறவாத புகழ்வாழ்வார் இனம் ஆக அருள்கூர்வீர்
பிறவாமை தருதாளீர்! பிறை சூடும் முடியீர்! சூழ்
அறல்வாவி மலிவுஆர்சீர் அவிநாசி உடையாரே! 7

மகவான்முன் அருள்சேய்வான் மதிஓல மிடமோதா
இகழ்போது ஓர் கணைஈவீர் எனைஆள விழையீரோ?
சகசீவ பரம்ஆனீர்! தழல்மேனி கொடுவாழ்வீர்!
அகல்பூமி முகமேநேர் அவிநாசி உடையாரே! 8

கரிமாமு கனை, வேல்சேர் கரவேளை யருள் நீர்தாம்
எரிநேரும் மிடியூடே எனைவாட விடலாமோ?
விரிபார்என் ஒருதேர்மேல் வியன்மேரு அரவாநாண்
அரிவாளி கொடுபோனீர்! அவிநாசி உடையாரே! 9

தமிழ்நால்வர் பெறும்வாழ்வே தரவேணும் எனநாடா
இமிழ்பாடல் சொலுமாறே எனைஏவும் அவர்ஆரோ?
சிமிழ் போலும் முலைமானாள் தினம்வாழும் ஒருபாலீர்!
அமிழ்து ஆரும் அவர் ஊர்நேர் அவிநாசி உடையாரே! 10

விடியார்முன் வலியாராய் வினைபோகும் வழியேபோய்
அடியார்முன் எளியாராய் அவிநாசியமர்வார்மேல்
மடியாத புகழ்சேர்வேய் வனமூடு வருவான்வாய்
துடியாக நுவல்பாவே துதிகூறின் மிடிபோமே. 11



## 2. அவிநாசியரன் பதிகம்

(காப்பு வெண்பா)

*அன்பர் புகழும் அவிநாசி யப்பா!என்*
*துன்பம் முழுதும் தொடைத்துஅப்பால்-இன்பம்*
*பெருகிவரச் செய்தருள்வாய்; பேதமையால் நெஞ்சம்*
*கருகிமிகச் சீரழிந்தேன் காண்.*

### நூல்

[அறுசீர்ச் சந்தவிருத்தம்]

*காரண காரியம் ஓர்வரும் புன்மதிக்*
*கடையேனை நின்அருளால்*
*பூரண போதம்வ ருத்திமெய் அன்பருள்*
*புகுமாறு செய்வாயோ?*
*நாரணன் நான்முகன் நாடரி தாம்ஒரு*
*நகம்ஆகி முன்நின்றாய்*
*ஆரணத் தோடு அருள் ஆகமம் ஓலிடும்*
*அவிநாசி யுள்அரனே!* 1

*சுந்தரற்கு அன்றுஅருள் செய்தமை கேட்டுநின்*
*துணைத்தாள் துதிக்கின்றேன்*
*மந்தரக் கொங்கைமி னார்மயல் வாரியில்*
*மாழ்கிக் கெடலாமோ?*
*கந்தரத் தில்கறை கொண்டவ னே! ஒரு*
*காளைப் பரியானே!*
*அந்தரத் தோர்தினம் வந்துகை கூப்பிடும்*
*அவிநாசி யுள்அரனே!* 2

*என்திகைப்பு அத்தனை யும்தவி ரும்பரிசு*
*ஈவாய் எனவேட்டேன்;*
*நின்திரு வுள்ளம்எவ் வாறு இருக் குங்கொல்? என்*
*நேயம் தெரியாதோ?*
*பொன்றிய வானவர் என்பொடு தாமரைப்*
*போதன் தலைபூண்பாய்!*
*அன்றில் ஒலிக்கும்வ ளம்திகழ் வார்பொழில்*
*அவிநாசி யுள் அரனே!* 3

செம்பொன்வி ருப்பம் மலிந்தத னால்பலர்
தெருவா யிலில் ஏகித்
தம்பொன்வி ழைந்தமை கண்டுஅவர் எள்ளிடத்
தவியாது அருள்செய்வாய்-
பைம்பொன் நிறத்தினள் பங்குடை யாய்கொடும்
பாந்தள்ப் பணியானே!
அம்பொன்ம டந்தைபி ரிந்துஅறி யாவளத்து
அவிநாசி யுள்அரனே! 4

முந்தநின் மெய்யருள் ஆயிரம் ஆடல்கள்
முறையே செயச்செய்த
பைந்தமிழ் இன்கவி என்னது வாய்கொடு
பாடில் பழுதுஆமோ?
சந்தனக் குன்றின்மு னிக் குஅருள் வாய்ஒரு
தலையில்ப் பலி தேர்வாய்!
அந்தணர் ஆர்வம்மி கப்பொலி சீர்திகழ்
அவிநாசி யுள்அரனே! 5

செத்தப சுக்கள்எ மும்படி செய்கெனச்
சிறியேன் இரக்கில்லேன்;
இத்தறை யில்கொலை யுண்டு அவை மாய்வதுஒன்று
இல்லாது அருள் செய்வாய்-
முத்தலை வேலொடு மான்மழு வும்புனை
முதல்வா! அருள் மூர்த்தீ!
அத்தன்எ னும்பொதுப் பேர்புனைந் தாய்எழில்
அவிநாசி யுள்அரனே! 6

வண்டமி ழில்துதி கூறிஅவ் வாறுஅழும்
வடலூ ரவன்றன்னை
மண்டலத் தோர் எதிர் காணுற வேண்டு என
வந்து ஒ தினன்ஆரோ?
குண்டலத் தில்சுரி சங்குஅணிந் தாய்! அருள்க்
கோலம் பலகொள்வாய்!
அண்டலர் ஊர்எரி யச்சிரித் தாய்அணி
அவிநாசி யுள்அரனே! 7

வில்லத னைக்கொடு சென்னியில் மோதிய
விசையன் றனக்குஅந்நாள்
வல்லவர் மெச்சிய வாளிஒன்று ஈந்தநின்
மனம் இன்று இரங்காதோ?
நல்லறி வில்பெரி யார்துணை ஆம் என
நவில்ஐந் தெழுத்தானே!
அல்லல்வி னைத்தொகை முற்று ஒழிக் கத்தகும்
அவிநாசி யுள்அரனே! 8

செவ்உரு வக்கண நாதனும் வேளும்நின்
சேயாம் எனவமையாது
எவ் உயிர்க் கும்பொதுத் தந்தை என்று ஓதிடும்
என்மேல் சினம் உண்டோ?
வவ்வுநர் எண்ணிய வண்ணம்எல் லாம்திகழ்-
வானே! அகல்வானத்து
அவ்உல கத்தின ரும்புக ழப்பெறும்
அவிநாசி யுள் அரனே! 9

வாசவன் ஆதியர் வாழ்வையும் தீதுஎன
மலர்த்தாள் களைநாடும்
நேசம் உற்று உய்ந்துள நால்வர்க ளோடுஎனை
நீவைத் திடல்என்றோ?
பாசமும் அங்குச மும்புனை வாள்ஒரு
பங்கில் திகழ்கின்றாய்!
ஆசு அறு சீர்அனந் தம்பொலி வீறுஉறும்
அவிநாசி யுள் அரனே! 10

தண்ணளி வாரிதி அன்னவ னை,புரி
சடையில் புனல்வைக்கும்
அண்ணலை, மாதவத் தோர்பலர் சூழ்தரும்
அவிநாசி யுள் அரனைக்
கண்ணன்அன் னார்பலர் மேவிய நெல்லையில்க்
கவிஞன் புகழ்பாடல்
நண்ணவல் லார்எவர்க் கும்கரு தும்பயன்
நணுகச் செயும்அன்றே. 11

## 3. புக்கொளியூர்ப் புனிதன் பதிகம்

### (காப்புவெண்பா)

ஓவாத சீர்புக் கொளியூர் அவிநாசித்
தேவாதி தேவன் அருள்ச் சீர்பாடக்-காவாழும்
ஐங்கரத்துக் குஞ்சரமும் ஆறுமுகத்து அம்மானும்
துங்கம் உறும் நல்ல துணை.

### நூல்

[எண்சீர் விருத்தம்]

அந்தணச்சே யினை முதலை உமிழத் தந்தது
அரியதமிழ்க் கவியினுக்கோ? அலதுஆ ரூரன்
பைந்தகைப்பொற் பணிஆதிக் கோலத் திற்கோ?
பசுவினம்வாழ் வதுகுறித்துப் பரவு வேனுக்கு
இந்தவிதத் துயர்விளைக்க லாமோ? முன்னாள்
இருந்த அருள் அத்தனையும் இழந்திட் டீரோ?
பொங்குஅகத்துக் கிள்ளைமறை பயிலும் சோலைப்
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 1

காதல்மின்னார் களிகூரக் களபம் பூசிக்
கடுக்கன்விர லாழிமுதற் கலன்கள் பூண்டு
பாதம் இறைஞ் சிய நாவலூரன் வேண்டும்
பரிசுஅளித்தீர்; திருவேடம் பரிந்து சாத்திச்
சீதளசந் திரன் எனநின்று இரக்கும் என்னைச்
சிறியவர்கண்டு இகழும் வண்ணம் செய்ய லாமோ?
போதனது சென்னியில் ஏற்று அருந்த வல்லீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 2

உம்மது நன் முகத்து உதித்த குலத்துள் ளான்என்று
உன்னியோ சுந்தரனுக்கு உவகை நல்கச்
சம்மதம் உற் றீர்? தமிழ்க்கே ஆகு மாகில்
தமியனேன் துதிகசப்போ? தவள மேனி
அம்மன் முத லோர்கள் சிந்தை அறிந்து எள் ளாவோ?
அநியாயம் செயவேண்டாம் அருள்க்கண் பாரீர்-
பொய்ம்மதத்தோர் இகழ்தருபல் கோலம் கொண்டீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 3

மந்திரபஞ் சாட்சரமே தஞ்சம் என்ன
மதித்துளநான் அருள்கருதா வாசி யோக
தந்திரச்சித் தரில்க் கடையாய்த் தவிக்க லாமோ?
தமநியப் பேய்ச் சமரம் ஒன்றும் தணந்தால் போதும்
முந்தியவர் சிலரேபோல் மோனை இன்றி
முரண்தொடையால் துதிக்கிலதால் முனிந்துள் ளீரோ?
புந்தியுள்வெள் விடைப்பரிமீது ஒருக்கால் வந்தீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 4

ஆதவன்சந் திரன் கனல்முக் கண்கள் ஆகும்
அடிகள்அடி யேன்துயரம் அறிகில் லீரோ?
வேதமுடன் ஆகமத்தின்அ பிமா னம்போய்
வெறிப்புனலும் வள்ளூரமும் விரும்பி உண்ணும்
பாதகர்சொற் படிநடக்கத் துணிந்திட் டீரோ?
பகர்அரிய சூனியத்தில் பதிந்துற் றீரோ?
பூதலம் உண்டு உமிழ்ந்தவன்கண் புனையும் தாளீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 5

சடையன்மகன் விரும்பியபொன் மிகவும் ஈந்தீர்;
தமியனேன் றனைக்கடனால் தவிக்க விட்டீர்;
தடைஅறப்பாய் தருதேன் ஆறு அனைய செஞ்சொல்த்
தமிழ்விருப்பம் அத்தனையும் தணந்தார் போன்றீர்;
விடைமிசைவந்து ஆளாமல் வடலூ ரானை
மேதினியோர் இகழவைத்தீர்; வெருண்டேன் அந்தோ!
புடைநடிக்கும் வேதாள கணம்மிக்கு உள்ளீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 6

பரவையும்சங் கிலியும் இன்பம் உறச்செய் பண்பும்,
பார்ப்பனச்சே யினைஅளித்த பரிசும் நாடிக்
கரவினர்கைத் தடிஅடியால் தினமுங் கோடி
காலிஇனம் மடியாமல் காத்தல் வேட்டேன்
உரம்அளிக்க மாட்டாமல் என்செய்கின்றீர்?
உரியபஞ்ச கவ்வியத்து ஆட்டு ஒழிக்கின்றீரோ?
புரதகனம் செய்வது எண்ணிப் புவித்தேர் ஊர்ந்தீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 7

தன்குலத்தோர் குரவர்முதல்ப் பலரைக் கொல்வான்
தனஞ்சயன்வேண் டிடல்அறிந்தும் தயைசெய்து ஆண்டீர்;
என்குறிப்பில்ச் சிறிதேனும் அறிகில் லார் போன்று
இருக்கின்றீர்; கொலைபுலை என்று இயம்பும் தீமை
நன்குவளர் வதுநுமது கருத்து ஆ மாகில்
நாயேனைக் கைப்படையால் நசித்து வாழ்வீர்;
புன்குணத்துத் தானவர்க்கும் அருளச் சோம்பீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 8

ஆனைமுகப் பெருமானும் கதிர்வேற் செங்கை
அறுமுகனும் மாயவனும் அனையான் தான்என்று
ஏனையர்போற் றிசைக்கும் நலம் கருதும் ஆசை
எனக்கு அளித்த கள்வர்மற்றிங் எவர் உள் ளாரோ?
வானைவழி யாக்கொள்சித்தன் ஒருவ னேனும்
வரின்நன்றுஆம்; அவர்பலரும் மடிந்தார் போலும்;
பூனையுள்ளும் எலியினுள்ளும் பொதுவா நின்றீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 9

நால்வர்பெறும் பேறுஎனக்கு நல்கு வீரேல்
நரர்இறைச்சி அருந்தாமை நாட்டி அன்றி
மேல்வழிபோய்த் தனிவீட்டில்ப் புகுத மாட்டேன்;
வேடன்எச்சில் ஊன்சுவைத்த விருப்பம் நீக்கி
ஆல்வயின்சற் குருஆன குணம்கைக் கொள்வீர்;
அடியவர்மேல்ப் பலகோடி ஆணை இட்டேன்;
போல்வது ஒன்றும் இன்றி எங்கும் தனித்தே வாழ்வீர்!
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரே! 10

கரந்தமனத் தினர் உணராக் கருணை யாரைக்
கரியநிறத்து உமைகலந்த காட்சி யாரைப்
புரந்தரர்என்பு அணிவாரைப் பொன்னூர் நாணும்
புக்கொளியூர் அவிநாசிப் புனித னாரை
மரம்தழைக்கும் பொதியைதரு பொருநை யாற்றின்
வடகரையில் நிகழ்வேணு வனத்தில் உள்ளான்
இரந்து அலுத்த துயர்தீரத் துதித்த பாடல்
ஏத்துமவர்க்கு இகபரவாழ்வு இரண்டும் உண்டே. 11

## 4. அவிநாசிப் பெருமாள் பதிகம்

### (காப்பு வெண்பா)

*அம்தண் பொழில்சூழ் அவிநாசி வாழ்பெருமாள்*
*கந்தம் கமழ்பூங் கழல்போற்றி - நந்தம்*
*கவலைமுற்றும் தீர்ந்துஉய்யக் காக்கும் குருகைத்*
*தவமுனிவன் ஆம்பெருமான் தாள்.*

### நூல்

(கொச்சகக் கலிப்பா)

*வேல்இலங்கும் தோள்வேந்தர் வியன்வாழ்வும் விரும்பாஎன்-*
*பால்இரங்கிச் செங்கருடப் பரியில்வர நினைவாயோ?*
*வாலியசங்கு ஒன்றுறு ஊதி வானவரை வாழ்வித்தாய்?*
*ஆலிலையில் துயின்றோனே! அவிநாசிப் பெருமாளே!* 1

*சக்கரம்சங் கொடுதோன்றித் தமியனேன் மனவெளியில்*
*புக்கதிரு வருள்இந்நாள் பொய்ஆகிப் போம்கொல்லோ?*
*மக்கள்உருக் கொடுபலகால் மாநிலத்தில் வரவல்காய்!*
*அக்கரம்எட்டு உடையானே! அவிநாசிப் பெருமாளே!* 2

*பார்அணங்கு படும்துயரம் பார்த்தும்மனம் சகியாமல்*
*சீர்அணங்கின் அருள்வேண்டும் சிறியனேற்கு இரங்காயோ?*
*காரணங்கள் அறிவானே! கடலினிடம் துயில்வானே!*
*ஆரணங்கள் ஆர்ப்பரிக்கும் அவிநாசிப் பெருமாளே!* 3

*பந்துநிகர் முலைநல்லார் பலர்சூழப் பசுங்கிளியில்*
*வந்து மதன் துயர்செய்யா வரம்எனக்கு என்று அருள்வாயோ?*
*பைந்துளவத் தொடைதோயும் பணைத்தோள்கள் ஒருநான்கில்*
*ஐந்துபடை அணிவானே! அவிநாசிப் பெருமாளே!* 4

*காழிநக ரிடைதோன்றும் கள்ளர்பிரான் தமிழ்ப்பாடல்*
*வீழ்இதயம் தமியேன்சொல் வெண்கவிகள் விழையாதோ?*
*பாழியுடைப் பார்த்தன் அழல் படியாமல் பரிதிமிசை*
*ஆழிஎடுத்து எறிந்திட்டாய்! அவிநாசிப் பெருமாளே!* 5

புங்கவர்பற் பலர்போற்றப் புவித்தலையில் திகழ்வான்நின்
செங்கமலப் பதம் சூட்டத் திருவுளம் சற்று இசையாயோ?
வெங்கனல்வாய்ப் பாம்பு ஒன்று வெகுண்டு அயர நடம்செய்திட்டு,
ஐங்கணைமா ரனைத்தந்தாய்! அவிநாசிப் பெருமாளே! 6

பண்டுஅடியேன் களிகூரப் பகர்ந்தமொழிப் படிஉலகும்
கண்டு அறிதற்கு ஆனபெரும் கருணைமழை பொழியாயோ?
கொண்டலின்மன் நாண்அடையக் குலவும் எழில் உடையானே!
அண்டர்களும் போற்றிசைக்கும் அவிநாசிப் பெருமாளே! 7

தேனைநிகர் சொற்பயின்று உன் திருமார்பத்து இருக்கின்றாள்
மானை ஒக்கும் நோக்குஎமது மாட்டு உறுநாள் வாராதோ?
பானைவிடேன் என்றாற்கும் பதம்கொடுத்தாய்! பைம்புனத்து அன்று
ஆனையினுக்கு அருள் செய்தாய்! அவிநாசிப் பெருமாளே! 8

தூண்பெறவந்து அன்றுஒருமெய்த் தொண்டனுக்கு இன்னருள்செய்தாய்;
மாண்புஎனக்கு ஓர் சிறிதேனும் வகுத்தருள மாட்டாயோ?
சாண்பெருக்கும் பொருட்டேனும் தனைத்துதிப்பார்க்கு எளியானே!
ஆண்பெண்அலி ஆவானே! அவிநாசிப் பெருமாளே! 9

குருகைநகர்ப் பாவலன்போல் கூறும்நலம் பெற்றுள்ளார்
அருகு இருக்க விரும்பும் என்னை ஆதரிப்பது எந்நாளோ?
பொருகயத்தின் கோடு ஒடித்தாய்! புலவர்கட்குஓர் அரசுஆனாய்!
அருள்வளமை மிகக்காட்டும் அவிநாசிப் பெருமாளே! 10

பூமேவும் மடநல்லாள் புணர்மருமத் திருமாலை
ஆமேய்க்கும் புகழோனை அவிநாசிப் பெருமாளை
மாமேய மலர்வாவி மலிவேணு வனத்தான்சொல்
பாமேய மனத்தாரைப் பரிவுஒன்றும் தொடராவே. 11



# சீரவை முனிவரின் செந்தமிழ்ப் பனுவல்கள்

## 1. விநாயகர் திருப்புகழ்

தனத்தத் தனதாத் தனதன தானன தனதானா

கருப்புச் சிலைகோட் டுபுமதன் நாமஓர்
பயற்புத் தலர்தூய்ப் பொருசெய லால்உறு
கருத்துப் பறிபோய்த் துயர்மிக வேதிரி விதமே ஆர்
கடத்தைப் பொழிபூட் கையின்இரு கோடென
மதர்த்துப் பணிபூட் டியமட வார்முலை
களைப்பொற் புரமேற் படஅணை வான்உள மிசை ஓவா
விருப்புற் றலைதூர்த் தகுணம்உ லாய்அவர்
உளத்திச் சையில்நாட் டுறுபல பாவவல்
வினைக்குட் சுழல் நாய்க் கிணைபடு வேன்நலம் உறுமாறே
விரைப்பொற் பிருதாட் கமலம்என் ஓர்முடி
இருத்திப் பிறவாக் கதிஎனும் நீள் அருள்
வெளிச்சத் தியல்வீட் டிடைகுடி யாகிட அருள்வாயே
மருக்கட் பொழிபூத் திரள்நிறை காஇயல்
வளப்பச் சவுராட் டிரம் எனும் நாடதை
வயக்கப் படஆட் சிசெய்மக ராசன துடலேதோய்
வனப்புக் கெடவாட் டிடுதொழு நோய்முழு-
தகற்றிப் பெரியோர்க் கிடம்என நீடு நின்-
மலப்பொற் பமைமாட் சிமைஉல கூடுற அருள்ஈவாய்!
தெருட்சித் தம் இலாச் சிறியவ ரேஉற-
வெனப்பொய்ப் புவிவாழ்க் கையில்உழல் வேன் அருள்
செழிக்கத் தவமேற் றவரிடை வாழ்வுற விழைவாயே;
திருக்குத் தெவிட்டாப் பலபல கோடிய
சிறப்புற் றவிர்காட் சிகள்மிக நீடிய
திருப்புக் கொளியூர்த் தளியில்நி லாவிய பெருமாளே!

## 2. முருகவேள் திருப்புகழ்

தனதன தானத் தானன தானன தனதானா

சலதியில் மூழ்கிச் சீகரம் வாருபு
மிசைஎழு மேகப் பான்மை கு லாவிய
தகரவி லோதப் பாவையர் மூடிய குவடேநேர்
தனமிசை ஆவற் கூடிஎ நேரமும்
அயல்பிரி யாமற் பேயில் அ னார்கள்மெய்
தழுவும்வி நோதக் காமுக னாஉயிர் தொலையாதே
அலகரும் வேதத் தோதரி தாகும்நின்
விமலசு கோதச் சாகர மாய் அவிர்
அடிஇணை ஓர் சற் றாயினு மேஉளம் அகலாதே
அமைவுற நாடித் தேவர்கள் ஆர்அமு
தெனஅநு பூதிப் பாடல்பல் கோடிஉன்
அணிஉர மீதிற் சூடிடு மாறருள் புரிவாயே-
குலவரை யாவற் றூடும்வி ராவிய
அடிமலர் நாடற் பாளருள் நீடிய
குறுமுனி வோன்ஒப் பார்நிலை தோய்தர அருள்ஈவாய்;
குகுகுகு கூகுக் கூஎன வேவரை
முழுவது மேபக் காகிடு மாறதீர்
கொடிபுனை தோள்மற் றோர்புயம் மேவிய கிளியோனே!
திலகவி நோதப் பாவையர் மாயையி-
னிடைபடு தீமைப் பாவம் உ றாதுயர்
திருவடி நாடற் பாளருள் மேவல்செய் குருநாதா!
தெருவிடை ஆரத் தோடகில் ஆர்புகை
கமழும்வி ழாஎப் போதினும் ஓவரு
திருஅவி நாசிக் கோயிலின் மேவிய பெருமாளே!

## 3. அவிநாசியப்பர் விண்ணப்பம்

[சந்தக் கலிவிருத்தம் - அதிகாரிணீ]

*பமரத்திரள் இசைகொன்றை, வெண் பனிமாமதிச் சடையும்*
*நிமலப்பதத் துணை, ஆதியும் நிலவுற்றுஎனுள் இலகாய்-*
*கமலத்துஅய னொடுமாதவன் காணாஅடி முடிஆர்*
*அமலத்திரு அவிநாசியப் பா!அஞ்சல் என்று அருளே.* 1

*மாதாபிதா வோடு இன்புற வந்துஆள்குரு தெய்வம்*
*நீதான்என வேஅன்பொடு நெஞ்சில் கரு தும்எனைக்*
*கோதுஆர் கொடு மாயைக்கிடை குமையும்படி விடில் ஓர்*
*ஆதாரம்ஆர்? அவிநாசியப் பா! அஞ்சல் என்று அருளே.* 2

*ஒன்றோஇரண் டோஎண்ணிட ஒண்ணாதன ஆகிக்*
*குன்றோகட லோஎன்றிடக் குறுகுற்றனன் துயரம்;*
*அன்றுஓலமிட்டு அடைந்தார் உய்வான் ஆலம்புசித் தவன் நீ*
*அன்றோ? புகல்; அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே* 3

*தினைத்துஅன்னஓர் பொழுதும் மனம் சிதறாது உனது அடியே*
*நினைத்துச்சுகக் கடல் மூழ்குவான் நெஞ்சில்க்கொளும் என்னை*
*வினைத்துட்டர்செய் துயர் உன்னுடன் விள்ளும்செயல் மிகையே;*
*அனைத்தும்தெரி அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே.* 4

*திரைமிக்குஅதிர் கடல்உண்டுஎழு சினைமாமுகில் என்னக்*
*கரையற்றபேர் அன்போடு இரு கண்நீர்பொழிந்து இன்பாய்*
*உரைஅற்றுஎனது உளம்அற்றுஉலவு உயிர்அற்றுஉள போதத்து*
*அரைஅற்றிட அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே.* 5

*அம்பு ஆகிய கண்ணாரிடை அருந்தும்சுகம் என்னும்*
*வெம்பாழ்நிர யத்துஎன்றனை வீழாவணம் ஆளாய்;*
*வம்புஆர்பொழில்க் காசித்திரு மந்தாகினி என்னும்*
*அம்பு ஆர்த்துஎழும் அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே.* 6

*நலன்உற்றநின் அடியேதினம் நாடாசைகொள் வேனை*
*உலகக்கொடு மாயைக்கிடை உழலச்செயல் மரபோ?*
*சலம்உற்றிடு தக்கன்புகல் சாபம்கெடச் சடைமீது*
*அலவற்புனை அவிநாசியப் பா! அஞ்சல் என்று அருளே.* 7

பாலும்செழும் தேனும்சுவைப் பாகும்கலந் தெனப்பா
நாலும்கொடுஉன் திறமேதினம் நான் ஓதிட விழைந்தேன்
மாலும்கதி ரவனும்குளிர் மதியும்தொட வானத்து
ஆலும்பொழில் அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே. 8

கரைஅற்றபேர் இன்பப்பெரும் கடல்உன்புடை உறவும்
தரைஉற்ற இத் துன்பத்தில்யான் தளர்வுற்றிடல் முறையோ?
வரைஉற்றிடும் உழுவைச்செழும் வடகத்தினை எழில்ஆர்
அரையில்புனை அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே. 9

மாத்தங்கிய உரம்சேர்திரு மாலும்குளிர் வனசப்
பூத்தங்கிய வேதாவும் தம் போதம்கொடு தேரா
மீத்தங்கிய திருத்தாள்முடி வினையேன் அறி குவதோ?
ஆத்தங்கிய அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே. 10

மானார்விழிக்கு உருகுஎன் சிறு மனம் நின்சுக வடிவத்
தேன்ஆர்பதத்துணை நாடிஅச் செயல்கொண்டிடல் உளதோ?
வான்ஆர்கதிர் ஊர்தேர்வரு வழிமாறிட அசையும்
ஆன்ஆர்கொடி அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே. 11

பரவைக்குஒரு தனிநாயகன் பாடற்குஉளம் பரிவாய்க்
கரவைச்சிறு மகவைத்தரக் காணும் தயைக் கடலே!
இரவைப்பொரும் மலம் நின்றுஎனை எடுத்துஆள்தல் நிற்கு அரிதோ?
அரவைப்புனை அவிநாசியப் பா! அஞ்சல்என்று அருளே 12

திருத்தம்கிளர் பேர் அன்பினர் சிந்தைப்பெரும் தளியில்
நிருத்தம் செய்நின் பதத்து அன்பு அறு நெஞ்சுஉற்றவன் எனினும்
வருத்தம் தவிர்த்து ஆள்வாய் என்றுஉன் மலர்த்தாள் சரண் ஆனேன்
அருத்தம் பொலி அவிநாசிப் பா! அஞ்சல்என்று அருளே. 13

புவிமாது எழில்த் திலகானனம் புரைபுக்கொளி நாமம்
அவிர்சீர் நகர் அவிநாசியப் பன்அஞ்சல் என்று அருள்வான்
சவிச்சீர் சிர வணம்ஆர்கந்த சாமிச்சிறி யேன்சொல்
நவில்வார்சிவன் அருளால்ப்பயன் நான்கும்பெறு வாரே. 14

## 4. கருணாம்பிகையம்மன் பதிகம்

(காப்பு வெண்பா)

திக்குஒளிசால் சீர்த்தித் திரள்சால் அவிநாசிப்
புக்கொளியூர்க் கோயில்இன்பம் பொங்கிடவே - புக்க
கருணாம் பிகைபதிகக் காப்புஅவள்தன் சேய்பொன்
அருணாம் புயச்சே வடி.

நூல்

[இரட்டையாசிரிய விருத்தம்]

கொங்குஉற்ற கொன்றையொடு பைங்கண்ப்பு யங்கம்இரு
கொம்புஉற்ற திங்கள்ஒலி தோய்
குளிர்வான திச்சடிலம் மிளிர்தேவன் உன்றன்மிசை
கொள்ளூற்ற வாஞ்சைமிகையால்
பங்குற்ற மட்டுஅலது நெஞ்சத்த லத்தினிடை
பதிவாக அதிமோகமாய்ப்
பாவித்து வரைவுற்றுஎன் ஆவிக்கொர் துணைஆன
பாவாய்எ னப்புகலும்நீ
எம்குற்ற மனதினிடை தங்குற்றி டில்ப்பெருமை
இன்றாகும் என்று எண்ணிலோ
இகமிசைக் கவிராசன் மகள்எனப் போனகதை
இலதுஎனப் பேசவருமால்
கங்குஉற்றி டாதபடி பொங்குற்ற அருளுடன்
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பிகைத் தேவியே! 1

கருமால்உ ழக்கும்பி றப்புஇறப் புற்றுள்க்
கலங்கும்எளியேற்கு நினதுஓர்
கழல்வீடு தந்தருள்தி அதுபெறற்குஆனவிதி
கடையனேற்கு இன்றுஎன்னிலோ
திருமால்உ ரம்குலவுஇலக்குமிதன் அமிசமும்
திசைமுகம் கொண்ட ஒருவன்
செந்நாஇ லங்குகலை மாதுஅமிச ம்அதுவும்என்
சிறுமன துஉறப்புரிவையேல்ப்

பெருமான்உ வக்கும் நின துஉருஅலங்காரம்செய்
பெற்றியொடு உன்அற்றம்அறுசீர்
பேசித்து தித்து நின துஒப்புஇல்ஆ னந்தமெய்ப்
பேர்அருட் கடல் மூழ்குவேன்
கருவானம் வெளிறமிகு கருணைமழை பொழியவே
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஒவு இல்
கருணாம்பி கைத்தேவியே! 2

வான்உற்ற தேவர்கன வினும்அறிய அரியதாய்
மணிமுடியின் மீதுஅமைப்பின்
மாடுஉற்ற ஒரு பரம னோடுஉற்ற உனதுஒப்புஇல்
மனம்உற்ற சினம்முற்றவும்
பானுற்ற பொழுதில்இம் மான்உற்றுஒழிந்து அருள்
பழுத்துத்த ழைக்க அருள்உன்
பதம்உற்ற பெருமை நின துஅளவில்ப்ப டாதஓர்
பண்புஉற்ற தேபோலுமால்
யான்உற்ற துயரமுடன்ஓதுற்ற முறைகள்நீ
அறியாத ஒன்று என்பனோ?
என்மைவினை நிற்றடைசெய் வன்மையினை உற்றுளது
எனப்புகல்வ னோ? தெரிகிலேன்;
கான்உற்ற சோலையில்விண் மீன்உற்றுஉ லாம்வளக்
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஒவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 3

மைஉற்ற ஆணவ இருட்டுஉற்ற கானினிடை
மருள்உற்ற மாயைவடிவுஆர்
மண்எனப் பெண்எனப் பொன்எனப் பேர்உற்று
வளர்எட்டி வேம்புஇலவிடை
மொய்உற்ற கனிவகைகள் துய்யுற்றுஉள்இன்புஅடைய
மூடமனம் ஆன கவிதான்
மோகத்தி னோடுஅவைகொள் சாகைக்கணே அதிக
மோகத்தி னொடு தாவியே

மெய்உற்று வாழஉனி நையுற்ற எனை ஈர்த்து
வெய்துற்று வாவுது;அந்தோ!
விறல்அற்றுஉனாது துணை பெறநத்தி னேன்அடியேன்
வேண்டியபடிக்குஅருள்ச்சீர்
கைஉற்று வாழஅருள் செய்;அற்றம் ஈது;மிகு
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்பரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 4

புலம்ஆனஐந்தலைகொள் மனநாகம் வாழ்க்கைஉறு
புற்றுஒத்த புலைவாரிதோய்
பொள்ளுற்றநவவாயில் கொள்ளுற்று அநித்தம்உறு
பொய்க்குள்ச் சிறந்தஅரசுஆம்
மலபாண்டம் இதனை ஒரு நான்எனக்கருதியே
மையல்க்கடல்க்குள் மூழ்கி
மனைஎன்றும் மகவுஎன்றும் உறவுஎன்றும் இகல்என்றும்
வாடுஎன்மதி என்மதிகோலோ?
நலம்ஆர்ந்த மெய்யடியர் தம்இருதயக்கமல
நாள்மலர் மலர்ந்துநாறி
நறவுஆன பேரின்பம் மிகஊறிடப்புரியும்
ஞானவடிவுஆம் பரிதியே!
கலம்ஆன திருவடித்துணை மேவி அருளோடு
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்பரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 5

கமலாதனத்தில்உறை திசைமாமுகக் கடவுள்
கைஒன்றுஎழுத் துஅழியவும்
கடிமலர்த்திரள்உந்து திறன் மாரவேள்புரி
கலக்கம்முற்றுஅற் றுஒழியவும்
யமராசனது கரம்பெறுபாசவலை வலிமை
ஈர்உற்று உலைந்து கெடவும்
இனியஉனதுஅடிகள்எனும் முடியை என்ஓர் முடியின்மிசை
எந்நாள்இருத்த இசைவாய்

மும்மலாசுஅகற்று பரமுத்தர்இனம் இன்புழுங்க
மூழ்கு பரசுகவாரியே
முருகனொடு கணபதி என்இருசுடர் முளைத்துஎழும்ஓர்
மோனமயமான வெளியே
கமம்நீடும்அருள் குலவும்ஒரு காசியினில்வாசி
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 6

நீர்ஆர்ந்தமுகில்அன்ன அளிகுலவு தார்கொண்டு
நீண்டு திகழ்அளக நிரையும்
நிலன்உற்ற வான்உற்ற பேர்இருள்அறச்சாடும்
நிலவுஉமிழும் மதிவதனமும்
வார்ஆர்ந்த பரஞான அமுதம்நிறைவுஉற்றகன
வரைபோன்றகுச யுகளமும்
மகிமைபெறு திருஉள்ள அருள்வாரி வாரிமிக
மாண்அடிவழுத்தும் இயல்சேர்
கூர்ஆர்ந்த மதிபெற்ற மெய்யடியர் தம்மீது
கொட்டும்இரு திருவிழிகளும்
குடிகொண்ட நெஞ்சைஉனதுஅடி கொண்டுநான்எனக்
கொடிகொண்ட பாவவடிவக்
கார்ஆர்ந்த மூலமலம்ஒழிய அருள்வாய்; அருள்க்
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 7

சுருதிகுருவடிவுஆகி வந்துஎனது உளத்தினிடை
தோய்ந்திடும் மயக்கம்முழுதும்
சுட்டொழித்திட்டும்அவண் நிலைபெற்றிருக்கும்ஓர்
சுயாநுபவம் எய்திடாமல்
பருதிமறையச் செய்திடு பணிஅன்ன மாயையில்
பருவரல்பட்டு எய்த்தனன்;
பகலின்கண்நிகழ்உனது திருவடிவம்யான்கண்
படைத்த பேறுஎய் தும்வண்ணம்

ஒருதினத் துஉதவி அருள் ஞானசம்பந்தனுக்கு
உதவுஅமுதம் உதவில்உன்னை
ஓகோ! தடுப்பவர்கள்யாவர்உளர்அவ்வாறு
உஞற்றிடில் குறைவுவருமோ?
கருதிலை கொல்? தாய்விடில் சேய்ஆர்அணைப்பர்புகல்;
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 8

திருவிருத்த கிரியினிடை உனதுஅருள்க் கழல்என்ற
சிற்சுகோததியில் மூழ்கும்
தீரம்மிக்க குமாரதேவனுள்க் குலவிநீ
செய்சுத்த சாதகத்தின்
மருவுற்ற அநுபவம்உனக்குவர என்றுஆசி
மாற்றம்நீ செப்பில்உன்றன்
வாயின் முத்தம்சிந்து மோ?சிரசில்இன்அடிகள்
வைத்திடில் கன்றல்உறுமோ?
அருள்உற்ற நீமலையில் எனதுள்க்குலாவவும்நின்
அடிமையான்அலைதல் முறையோ?
அடிமைபடு துன்பினைக் காண்தொறும் உனக்குஉளத்து
ஆனந்தம்விளைவது கொலோ?
கருதுற்ற நின்செயல்எ தேனும்என் பாக்கியம்;
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 9

கருத்தங்குஇ ரத்தமொடு புன்புலைச் சீலைநீர்ஓர்
கான்ஆறுஎனப் பெருக்கும்
கமர்ஈஎறும்பு ஆதி மொய்க்காதும், ஆடவர்கள்
கண்டுஅருவருத் திடாதும்,
வருத்தம்உற உரமீதுஎழும்சிலந்திக்குமிக
மானம்மருவுற்றும் மடவார்
வண்மைபெறு பட்டுஉடையினால் மறைக்கிறதுஆகும்
வாய்மையை உணர்ந்திடாதே

விருத்தம்கொள்என் நெஞ்சகம் சரக்குஏதுஇவர்கண்
மேவுற்றதுஎன்று நாடி
விநோதம்மிக்கு அலைகின்றது உன்அருள்ப் பதம்என்னும்
வெளியிடைவிராவல்உளதோ?
கருத்துஉன் பதத்தில்கொள்அன்பர்இரு தயம்அன்ன
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 10

கதிவேண்டி வேன்;உனைப் பதிவேண்டி லேன்;மருக்
கற்பகக் பொன்னுலகைஆள்
கனவாகனத்து உலவு கனவான்நலத்தைஒரு
கனவூடும் வேண்டிலேன்; மால்
திதிவேண்டி லேன்;மற்றை இன்பம்என ஓதிடும்
செயலுள் ஒன்றையும் வேண்டிலேன்;
சித்தமிசை இவன்ஏது கேட்டிடுவ னோஎனச்
சிறிதும் அஞ்சேல் மகிமைசால்
மதிவேண்டி பேரறிஞர் வேண்டும் நின துஇருதிரு
மலர்க்கமல பாதமிசையே
மாறாதபேரன்பு அளித்து,என்உடல், பொருள்,ஆவி
வாஞ்சைகொடு கொளவேண்டினேன்;
கதிர்வேண்டும் மணிமாட நிரைஓங்கும் வரைபோன்ற
கவின்ஆரும் அவிநாசியில்
கனகாம்ப ரக்கோவி லிடம்ஓங்கு பொற்புஓவுஇல்
கருணாம்பி கைத் தேவியே! 11



## 5. கருணாம்பிகை மாலை

### காப்பு

(கட்டளைக் கலித்துறை)

*கராவானனந் தச்சுதற் கால்புக் கொளியவி நாசிக்கணே*
*விராவானந் தக்கரு ணாம்பிகை யம்புய மேல் அணியும்*
*பராவானந் தக்கவி மாலையொன் றன்பிற் பகர்ந்திடுமால்*
*இராமானந் தக்குரு தேசிகன் செம்பொன் இணையடியே*.*

### நூல்

(கட்டளைக்கலித்துறை)

*வண்டுண்ட பூங்குழ லுங்கதிர் மாமதி [1] வத்திரமும்*
*கண்டுண்ட சொற்செங் கனிவாயும், தாள்முற் கழறுமெலாம்*
*தொண்டுண்ட அன்பருட் டோன்றுதல் போல்எனுட் டோடகத்தும்*
*அண்டுண் டமர்தி அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 1

*ஏயென் றிடுமுனம் ஓர்படை யின்றி இகலவர்ஊர்*
*தீயென் றொழி நகை யார்குரு வானசெவ் வேளினையும்*
*சேயென் றெடுத்துமுத் துஞ்செய லால்நீ செகத்தவர்க்கும்*
*ஆயென் றறிந்தேன் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 2

*மாதவன் என்றுல குள்ளாரெல் லாம்திரு மாலைச்சொல்வர்*
*ஏதவன் பெற்றதொன் றென்றிருந் தேன்; உள வின்றறிந்தேன்*
*சோதரி என்றுல குக்கன்னை யாம்உனைச் சொல்லக்கொண்டான்*
*ஆதலி னால்மெய் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 3

*நினையான் தொழாஓர் சிறுபரு வத்தினில் நேடிவந்து*
*வினையேனை ஆண்டனை நாடும்இக் காலருள் மேவிலர்போல்*
*பனையே அனைய துயர்படக் கண்டும்உட் பார்த்துநின்றாய்*
*அனையே முறைகொல்? அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 4

*வேதன் படைத்தலுத் தன்னம் இரங்கிலன்; வெற்றிமது*
*சூதன் திதித்துளஞ் சோர்ந்தவ னாய்இனும் தூங்கினன்: தென்*
*நாதன் பிடித்தலுத்து உன்நா யகன்உதை நாடிநின்றான்*
*ஆதன் சரணம்; அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே* 5

*இத்திரிபுச் செய்யுளின் உரையை இம்மாலையின் இறுதியில் காண்க.

பஞ்சேந் தியப்பகை வோர்செய லால்உட் பதைபதைத்தேன்
பஞ்சேய்ந்த நின்றிருப் பாதாம் புயப்புகழ்ப் பன் மதுர
புஞ்சேந் தமுதம் நிகர்பாடல் அன்பிற் புனையப்பெற்றேன்
அஞ்சேன் இனிச்சற் றவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 6

களபம் விராவிய பொன்வரை யென்னக் கவின்தரும்நின்
புளகித ஞானத் தனந்தரு பாலைப் புகலியர்கோன்
கொளலினும் என்னனை யார்க்கந்த மாட்சி கொடுக்கில், வரும்
அளவறு கீர்த்தி; அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 7

எனக்கோர் செயலெதும் சற்றிலை, யான்ஈண் டிசைப்பதென்? என்
மனக்கோவில் மேவிய நீயறி யாஓர் மறைவகைகொல்?
வனக் கோ கிலமன்னை நீ எது செய்கினும் வாழ்வெனக்கே
அனக்கோன் புகழும் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 8

கானார் திருவடி சேர்த்தாள்தி! அச்செயல் காணல்இன்றேல்
வானார் அமுதினும் மேலா யிலங்கும் மதுரபுஞ்சம்
ஆனா இசைத்தமிழ்ப் பா நாலும் உன்றன் அடிக்கணிய
ஆனாலும் நல்கி டவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 9

செந்நிறந் தோய்பவ ளக்குன் றனைய சிவபெருமான்
தன்னிற மங்கல நாண்நின் களத்தில் தரித்ததனால்
நின்னிறங் கண்டத் தணிந்தமை ஓர்கிலர், நீல்விடம்நல் [கு]
அன்னிற மென்பர் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 10

காரண காரியம் யாவையு மாகிக் கடந்து நின்று
நாரண னுக்கொரு தங்கையு மாநிகழ் நாரணியே
பூரண ஆனந்தம் எற்கீயில் நின்புகழ் பொன்றிடுமோ?
ஆரண மேத்தும் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 11

மலையத் துவசன் இமவா னொடுதக்கன் வாரியுற்ற
வலையற்கும் சேயென வந்துறும் நாள்நிலம் வைத்தநின்தாள்
தலையில் பதிக்கஎன் முன்வந் திலகிடில் தாழ்வுறுமோ
அலைவற்ற சீலநல் [கு] அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 12

மறுகுற நிந்தை நுவல்வோன் றனக்கு மகள்ளனப்போய்
அறுமதி உண்டி அமைத்தாய்! உனை அங்ஙன் ஆசிக்கிலேன்
சிறுபொழு தேயென்முன் வந்திட வேண்டினன்; சிந்தைசெய்வாய்
அறுகணி வாரொ டவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 13

பூரணை என்ன அமாவாசை தன்னைப் புகன்றி [டு] அவன்
மாரண மெய்தற் சகிக்கா தருளின் அவ் வாறளித்த
காரணி நீ அடி யேற்கரு ளிற்றடை காண்பவர்ஆர்?
ஆரணன் போற்றும் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 14

வினையொன்று தாயரும் அன்றோ, தமக்கு விரோதமுற்ற
தனையன் துயருறக் காணில்த்தம் உள்ளம் சகிக்கின்றிலார்
உனைநம்பும் நாயடி யேன்துக்க மிஞ்சி உயங்கல்நன்றோ
அனைஎன்று யார்க்கும் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 15

புத்தனிச் சம்பொலி பூவினும் மெத்தென்நின் பொற்பதத்தைச்
சித்தம் துணிந்தம்மி மேல்வைத்த அந்தத் தினமுதற்கொல்
பித்தனென் றேஉல குள்ளார்கள் யாவரும் பேசிடும்பேர்
அத்தனுக் குற்ற [து] அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 16

நிலவார் சடைபெறும் நம்பெரு மான், நின்ஓர் நெஞ்சில்உண்டாம்
பலமார் சினத்தினுக் கஞ்சிக்கொ லோஒரு பாவைதன்னை
வலமாவைக் கா[து] அற லாக்கித்தன் புன்சடை மாட்டுவைத் தான்
அலவோ உரைத்தி! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 17

வேலியை நின்மகன், குஞ்சரி யைக்கொள் விதமெனவே
மேலியை கங்கையை முன்வேட்டு, வள்ளியில் மேவும்மலை
நீலிஎன் நின்னைப்பின் வேட்டுறில் இச்செயல் நேர்ந்திருக்கா [து]
ஆல்இயை வோனுக் கவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 18

குருவாகித் தாரகத் தின்பொருள் ஈதெனக் கூறுசெவ்வேள்
பொருவாமெய் ஞானப் பொருளொன்றை ஓதிப் புவிநடையின்
மருவா சிரம வகையுணர்த் தாமையின் வந்ததன்றோ
அருவாம் அவற்கிஃ து?அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 19

இகலிடந் தன்படை தன்னையெக் காலும் எறிதலின்றிப்
புகலிட மாயெவர்க் கும்நின்ற பூரணன் பொன்வடிவிற்
பகலிடம் நீகொண் டிலங்கிட அன்னவன் பாதிஉரு
அகலிடம் ஓதி! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 20

நலப்பாகம் என்கை வலப்பாகம் என்பர்கள் நன்குணர்ந்தோர்
கலப்பாகநின் இடப்பாகங்கொண்டான், கண்டும்;கண்ணுதலோன்
வலப்பாகத் தைப்பெறும் மாட்சிதற் கின்றென் மருட்சிகொண்டோ
அலப்பாகம் கொண்ட தவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 21

அஞ்சினை மீன், மக ரங்கொண்ட கீர அம் போதியில் ஆர்
நஞ்சினை, அஞ்சிய தேவர்உய் வான், உயர் நாதன்உண்கால்
மஞ்சினை நேர்அரக் கன்வரை தூக்கிய வைகல்என்ன
அஞ்சினை யேகொல்? அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 22

குன்றா விறல்அரக் கன்கயி லாயக் குலவரையைத்
தன்தாழ்வில் ஆண்மையில்த் தூக்குஅங்கு சங்கரன் தன்னுடனே
ஒன்றாம் வடிவுற் றிருந்தனை யேல்என் உளூற்றிடுவாய்!
அன்றா ரணிசொல் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 23

நகம்உற்ற வன்புவி சூழ்ந்தெய் திடுமுனம் நான்றிடுங்கை
முகம்உற்ற சேயன், உமைச்சூழ்ந் தினிமை முதிரப்பெற்ற
சுகம்உற்ற தாங்கனி பெற்றன னால்; அத் துணையில் உன்றன்
அகம்உற்றது ஆர்கண்? அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 24

அளித்திட்ட தந்தைக்கு மூத்தவன் மீதும், அலகில் அன்பிற்
குளித்திட்ட தாய்க்கிளஞ் சேய்மீதும் ஆர்வம் குலவும்என்பார்
தெளித்திட் டனன் அதை நம்பெரு மான், நீ சிறுமகனுக் [கு]
அளித்திட்ட தென்கொல்? அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 25

பார்மீது கொண்ட வழக்கீது நின்னுளப் பாங்கர்அந்தக்
கார்மீது கொண்ட மதம்சால் கயானனன் கண்கொல், வென்றிச்
சூர்மீது போர்க்கெழுந் திட்டவை வேற்கைச் சுதனிடங்கொல்?
ஆர்மீதில் ஆர்வம் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 26

திறங்காட் டியதிரு நாவுக் கரசைச் சிவபெருமான்
மறங்காட்டிச் சூலை கொடுத்தாண் டருளினன், வாரிஅருள்
நிறங்காட் டியஅன்னை நீசேய்க்கு ஞானம் நிறையமுதீந்[து]
அறங்காட்டி ஆண்டாய்; அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 27

சோதித் திருவுரு ஒன்றே இருவர்க்கும் தோய்ந்துறினும்
பாதித் திருவுரு வங்கொண்ட நீநின்னொர் பக்தர்களைச்
சோதித் திருந்துயர் செய்யநின் உள்ளம் துணிதல்இன்றால்
ஆதிக்குன் சீரின் றவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 28

அல்லற்ற அன்பர் உளத்தடத் தேஅலர்ந் தண்டரெய்தாச்
சொல்லற்ற இன்பம் தருந்தாள்என் சென்னியிற் சூட்டி, உற்ற
பல்லற்ற மாசுணம் போல்மாட்சி யற்றுப் பதைபதைப்பேன்
அல்லல்த் தவிர்த்தி! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 29

மஞ்சேல வார்குழ லுந்தில கத்திரு மாமுகமும்
வெஞ்சேல் அனைய விழியோ டலம்புறு மேகலையும்
பஞ்சேல் அருட்பத முஞ்சிறி யேன்விழி பார்க்கவந்திட்[டு]
அஞ்சேல் என்றாள்தி அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 30

நண்ணன் புளமெய் அடியாருள் ஓங்கும்நின் நாண்மலர்த்தாள்
புண்ணன்புன் நெஞ்சகத் தெய்திடற் கச்சம் பொருந்திடுமோ
கண்ணன் துலங்கும் எண் கண்ணன், விண் ணன், வரைக் கண்ணன், அவன்
அண்ணன் புகழும் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 31

ஆங்காரம் ஆதிய தத்துவம் யாவும் அறுத்தொழித்தே
தேங்கானந் தப்பெருஞ் சாகர மாகும்நின் சிற்றிடையின்
பாங்காக நான்என்றும் நீங்காத இச்சை படைத்துடையேன்
ஆங்காக ஆள்தி; அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 32

தசைமே வியபுன் புலைக்குடி லாம்இச் சடத்தின்மிஞ்ச
நசைமேவி வீணில் அலைந்தொழிந் தேனைக்கண் நாடிஉன்றன்
இசைமே வியமெய் அடியார் பெறும்நிலை யிற்குலவி
அசையா தமைத்தி; அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 33

மால்மே வியநெஞ் சுடையேன் எனினும்நின் வாரிசப்பொற்
கால்மே வியஅன் பளித்திடில் அந்தக் கணத்தில்வடி
வேல்மே வியபிள்ளை யென்றுல கேத்த விளங்குவனால்
ஆல்மே வினன்கொள் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 34

உள்ளத் தலத்துற்றும் யானறி யாதின் புதவிஉள்ளத் [து]
எள்ளத் தனையும் இரக்கம் இலாரில் இருந்திடும்நின்
கள்ளத் தினைநின் அருளோஎன் உள்ளக் கனியும் அன்போ
அள்ளற் றொழிப்ப தவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 35

பாட்டிவைத் திட்ட புதையல்உண் டென்னப் பகர்ந்துதினம்
நாட்டில் இரக்கின் றவர்செயல் மேவினன், நாரணிஎன்
மாட்டில் உனக்கிந்தச் சோதனை யேன் அருள் வாரியிடை
ஆட்டி அருள்செய்! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 36

மாயப் பெருஞ்சுமை யாயிருந் தீற்றில் மடிந்திடும்இக்
காயப் பெருந்துயர்க் கோட்டையுட் பட்டுக் கலங்கினன்காண்
நேயப் பெருந்தவர் தாம்மரு வுற்ற நிலைதருமாறு
ஆயத்தம் ஆவாய் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 37

வெங்கானல் அம்பென ஓடிடும் மானில் இவ் வீண்உலகெ
னுங்கான கத்திடை யான்உழ லாமல்இன் போங்கிடநின்
அங்கால் நளினம் முடியிலென் சென்னி அமைத்தழியா [து]
அங்கான சீர்நல் கவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 38

கஞ்சம் பழித்த அடிபெயர்த் தன்பில்க் கவின்பிடியோ [டு]
அஞ்சம் பழித்த நடைமேவி என்றன் அருகணைந்து
நஞ்சம் பழித்தகண் ணோக்கியென் மீதுற நண்ணும் அந்த
அஞ்சம் பழித்தி! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 39

வானம் தழைத்திடு தேவர்எங் நாளும் மருவரிதாய்
மோனம் தழைத்த முனிவோர்தம் உள்ளத்தை மூடிஉற்ற
தானம் தழைத்தநின் பாதாம் புயத்திடைத் தங்கிடும்பேர்
ஆனந்தம் நல்கி டவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 40

பஞ்சுற்ற செம்பொற் றுணைத்தாளும் மற்றதன் பாலமைந்த
மஞ்சுற்ற சீரடி நூபுரத் தெய்வ மணக்கமழ்வும்
மிஞ்சுற்ற பேரரு ளோ [டு] அக லாது விளங்கில் என்றன்
அஞ்சுற் றமையும் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 41

நீமால்த் தழையும்என்னுள்மறைந் தாய்கொல் என் நீள்வினைகள்
தாமாற்ற லால்மறைத் துள்ளன வோகொல், தகையிரண்டின்
ஏமாற்றம் இங்ஙன் இருப்பதென் [று] ஓர்கில் தேங்குமென்றற் [கு]
ஆமாற்றம் ஓதி! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 42

நின்னிடத் தோ, வினை தன்னிடத் தோ, மறை நேர்ந்ததென்பேன்
முன்னிடத் தேவந்து பன்னிடத் தோற்றிடில், மூடும்வினை
உன்னிடத் தேவழக் கிட்டிடு மோ,ஒன் றுணர்கிலன்யான்
அன்னைஎற் குச்சொல்! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 43

எனைத்தடை செய்த தருட்கட லே, நினை எய்தஎன்றன்
வினைத்தடை யென்றுளத் தெண்ணியிங் குற்றேன், விழிகொளநீ
நினைத்தடை யிற்றடை யாதொன் றுவந்து நிகழ்த்துவதோ
அணைத்தடை யென்கொல் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 44

வினைக்காண வத்திற் கிளைத்துநொந் தேங்கி வெதும்புகின்றேன்
நினைக்காண என்றும் நினைத்திடல் போல், நிக ரற்றுள நீ
எனைக்காண எண்ணில்முற் றாதோபொய் கொல்? சுதற் கேற்றமுற்ற [து]
அனைக்காணம் என்ப அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 45

பன்னப்பன் னப்பர மானந்தம் தேக்கும்நின் பங்கயப்பொன்
வன்னப்ப தங்களுள் மன்னப் புரிந்துறும் மாயைஎன்ன
உன்னப் படும்இருள் சின்னப் படப்புரிந் தோட்டுகண்டாய்
அன்னப் பணைகொள் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 46

தாயென் றுலகத் துடலீன் றவர்களைச் சாற்றிஅவர்
சேயென் றிருப்பவர் தங்கண்முன் நிற்சரண் சேர்ந்திடும்யான்
போயென் றுயர்சொற் றிடவிடுத் தால்நின் புகழென்னவாம்
ஆயென் றனசீ ரவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 47

*நின்னடிக் கன்பொடு குற்றேவல் செய்யும் நிலைபொறுத்த*
*பொன்னடிக் கன்புசெய் தங்கவன் நோக்கம் பொருந்தியுற்றோர்*
*முன்அடி யேன்தலை தாழ்த்திடல் ஏற்ற முறைமைகொலோ*
*அன்னடி கூந்தல் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 48

*வரசங்கம் ஈந்திடும் நின்தோழி யாகிய வாணிமின்னாள்ப்*
*பரசங்கம் ஏய்ந்தவர் யாவரும் பண்டிதப் பான்மையராய்ப்*
*பிரசங்க ராய்இறு மாந்திட யான்உளம் பேதுறவோ*
*அரசங் கரனொ டவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 49

*தனுவாதி நான்கையும் தான்அல வென்றுண ரத்தகுமோர்*
*அனுமான ஞானம் அடைந்ததல் லாதுஉன தம்புயத்தாள்ப்*
*புனுகாதி வாசந் தழைத்தில தென்? மெய் பொருந்திடுமா [று]*
*அநுபூதி நல்கி டவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 50

*களிவந்த பேரன் பமைந்தெலும் பாதி கரைந்துருகித்*
*துளிவந்த கண்களொ டுன்றிருத் தாள்கள் துதித்திடவே*
*வெளிவந்து நின்னருட் சேவைநல் காத விதம்என்கொலோ*
*அளிவந்த கோதை அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 51

*எனைஅடுத் தார்களும் பேரின்ப வாரி யிடைமுழுகி*
*நனைஅடுத் [து] ஆர்க்கும்வண் டொத்திடு பேறுற நாடிஅன்பால்*
*நினைஅடுத் தேன்என் குறையா வையும்அற நீங்கிஉய்வான்*
*அனை! அடுத் தாள்தி! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 52

*நிறைவுற்ற தாய் நின் புடையுற்ற தான நிமலஇன்பம்*
*குறைவுற்றிடும் இவற்கீயில்என்றெண்ணிக்கொல்லோதெரியேன்*
*மறைவுற் றமைந்தது, தாய்!எற் களிக்க மனமிலையோ*
*அறைசற் றிணையில் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 53

*நாயேன் பலர்க்கும் உரித்தாக நின்அருள் நாடல்அன்றிப்*
*பேயேன்மட் டில்ச்சுகம் பெற்றிடு மாறுளம் பெட்டிலனால்*
*நீயேன்மட் டற்ற அருளொளித் தென்கண்முன் நேர்கின்றிலாய்*
*ஆயேன் றனக்கோது அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே!* 54

தன்அள வேசுகம் நாடினர்க் கீந்தஓர் தண்ணருள், நீ
மன்அள வற்ற உயிர்த்திரட் கின்பம் வழங்கஎண்ணும்
என்அள வில்த்தயை இல்லாரில் மேவிய தேதுஇசையாய்
அன்னள் அளகத் தவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 55

கோடிபல் கோடிகுற் றத்தரென் றாலும்நின் கோமலர்த்தாள்
நாடிடில் அங்கவை யாவும் எரிப்பஞ்சின் ஞாயமென
வீடிடும் என்று மறைபேசும் மாற்றங்கள் மெய்அலவோ?
ஆடி! அபயம் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 56

என்அள வேதென நானறற் கின்றிலன் என்னில் அண்டம்
மன்அள வற்ற உயிர்யாவி னூடும் வயங்கிநின்ற
நின்அள வெங்ஙனம் கண்டுகொள் வேன், நிகர் செப்பிஉன்னை
அன்னள் என் றோத அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே ! 57

வான்என நின்றஎன் உள்ளகத் தேஅருள் வாரிஒரு
தான்என நின்று விளக்கும்நின் சீலந் தனைக்கண்டிலேன்
ஊன்என நின்றதை நான்என் றுழன்றேன் உணர்விலியே
ஆனெனக் கூவி டவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 58

மாணவிர் உன்றன் திருவரு ளின்பெரு மாட்சியொடென்
ஆணவங் கொண்டிடு வன்மையும் என்அள வற்றதெனக்
காண அளித்தனை; என்றனை ஏது கவர்ந்திடுமோ?
ஆணஅன் னேவிள்! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 59

அடாதுசெய் ஐம்புலக் கள்வரில் யாப்புண் டளவுசொலப்
படாததுன் பக்கட லூடமிழ்ந் தேன்;நின் பதத்துணையாம்
கெடாதஓர் நற்றுணை கண்டேன்; அதனைக் கிடைத்திடுவான்
அடாகொள்என் றீதி! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 60

கூவிட்டி டாதவர் போல்என்கண் அன்பிற் குறுகிஇன்பத்
தாவிட்டி டாசுதல் செய்யேல்! உனது தனிமலர்த்தாள்
ஏவிட்டி டாதமெய் அன்பெனக் கீந்தொவ்வொர் ஏல்வையினும்
ஆவிட்டி டாதை அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 61

நான்நினைப் புற்ற முடியாதென் றும், எங்கள் நாரணிநீ
தான்நினைத் திட்டஅற் றேயாதல் தேர்ந்துன் சரணடைந்தேன்
மால்நினைத்து ஆழ்என் மனம்நின் திருவடி மாட்டமையும்
ஆனினை நல்காய் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 62

வருகணத்து எந்நினை வுற்றெச் செயலை வயக்குவன் என் [று]
ஒருகணக் கும்தெரி யாதவ னாய்இவ் வுலகினிடை
மருமலர் வாவியின் வண்டென்ன வாடி மயங்குமெனை
அருகணைத்து ஆள்செய் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 63

என்புஉடை யும்படி எய்தும்என் துன்பங்கள் யாவையும்நின்
தன்புடை அன்றி உலகிலென் போலத் தளர்ந்திலங்கும்
பின்புடை யாரிடை ஒதுகி லேன் மெய் பிறங்கியஎன்
அன்புடை யாய்வண் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 64

தேசுற்ற நின்னரு ளேதோய நாடும்என் சிந்தனையைப்
பேசுற்ற வாறரு ளேநல்கி டாதுஇகல்ப் பேயனைய
காசுற்ற பேரிடம் மாசுற் றலையக் கணித்ததென்னே
ஆசுற் றவர்தீர் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 65

தனியே யிருந்துன் அருள்வாரி சப்பொற் சரணங்களே
கனிவோடு நாட இனியா கினும்உள்க் கருதிடுவாய்
பனியார் இமயத் தரற்சேர மாதவம் பண்ணியநீ
அனியாயம் செய்யேல் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 66

உலகக் கொடுநடை மெய்யென நாடிஎன் உள்ளம் அந்தோ
கலகப் புலனிற் கவிழ்கின்ற தால்இதைக் காட்டிடும்ஓர்
வலிமற் றமையும் வழிதெரி யாமல் மயக்கம்மிஞ்சி
அலமிக் கமைந்தேன் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 67

சுட்டை ஒழிந்த சுகாதீத ஞானச் சொருபஉருத்
தொட்டைய மாதிய வாந்தொடர் யாவையும் சுட்டொழித்து
நிட்டையி லேய்ந்திடு மாறெந்த நாளில் நிறுத்துவையோ
அட்டை வரையும் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 68

சேமம்மிக்கு உந்துஉன் திருப்பத பங்கயம் சேர்ந்திடுவான்
போம்மனத் தூடு மடவார்கள் ஆசை பொருத்தும்இகல்க்
காமனுக் கும்சிலை ஈந்தாய்என் மட்டிற் கருணையின்றோ
ஆமனத் தின்கண் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 69

நோய்வேண் டிடும்பொரு ளானாலும் உள்ளத்தில் நோக்கிஉற்ற
சேய்வேண் டிடில்உடன் தந்திடு வார்செகத் தன்னையர், என்
தாய்வேண்டிக் கேட்பது மற்றொன்று மில்லைநற் றாளின்அன்பே
யாய்வேண்டி நல்கி டவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 70

கின்னஞ் சுமக்க வரும்பஞ்ச பூதக் கிறிஉடலை
இன்னஞ் சுமக்க விடாதே அடைக்கலம் யானடியேன்
மன்னஞ் சுமக்கு மலரடி சேர்த்துதி; வாரிசங்கள்
அன்னஞ் சுமக்கும் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 71

ஓவருங் குற்றங்கள் பற்பல கோடி உளூற்றினும்நின்
பூவருந் தாள்த்துணை யேசேர இச்சையும் பூண்டுளனால்
நீவருந் தப்புரிந் தாலும்அல் லாதருள் நேர்ந்திடினும்
ஆவருஞ் சேய்காண் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 72

பூணேய மங்கையர் பால்நேயங் கொண்டு புழுங்குதற்கோர்
ஆணே யெனப்பிறந் திட்டதல் லால்இவ் அவயவஞ்சார்
மாணேயங் கொண்டவர் நற்செயல் ஒன்றும் வயக்கிலன்உன்
ஆள்நேயம் வைத்தாள் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 73

தோல்தித்திக் கேஇரை தேடிநொந் தேங்கஇத் தொல்லுலகில்
தோற்றித்திக் கேதும் அறியாம லேபுலத் துட்டருக்குத்
தோற்றித்திக் கேழொடொன் றும்வசை தோயெனைத் தொண்டனென
ஆற்றிச்சற் றாள்செய் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 74

சேயேயென் யான்மிகு சேயேன் எனினும் திருவருள்தோய்
தாயே யெனநிற்பை தாயேநிற் பாய்சர ணந்தமியேன்
மாயேய வாழ்வில் மயங்காது மாயே சுவரியென்னும்
ஆயே அளித்தி அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 75

மண்ணாசை யோடுறு பொன்னாசை நெஞ்சை மயக்கிடும்ஓர்
பெண்ணாசை கொண்டு திரிந்ததல் லாமலுன் பெய்மலர்த்தாள்
எண்ணாசை சற்றறி யேனையுன் தொண்ட னெனப்புரிந்துள்
அண்ணாசை தீர்த்தி அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 76

செய்யும் வகையிது வென்றறி யாதுள் திகைத்துமிக
நையும் தகையன் எனையாள என்றெதிர் நண்ணி,அருள்
பெய்யும் படிநினைக் கிற்றடுப் பாரெவர் பேசுகண்டாய்
ஐயுந் தியசீ ரவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 77

குருவாகி நீயடி யேற்குமுன் நின்று குறித்துணர்த்தும்
சொருபாநு பூதி விளக்கமெந் நாளினிற் றோயவைப்பாய்
பொருவா ரிதியுடைப் பூவார் உயிர்வான் புகுந்திடச்செய்
அருள்நா டகர்கொள் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 78

பொய்யிடைப் பட்டஎன் புன்புல னாங்கொடும் பூழியுட்பட்[டு]
ஐயிடைப் பட்டயர் ஈப்போல நொந்திங் கழுந்தெனை ஆள்!
மெய்யிடைப் பட்டதொண் டன்பினர் தம்கண் விருந்தெனவே
ஐயிடத் தோங்க அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 79

கணிகையர் இல்தொறும் இன்பம்மொண் டுண்டு கடைப்படும் ஓர்
பிணியியல் மத்தளி கற்கும் திருவருட் பேறளித்தாய்
தணிவறும் நின்புகழ் பாடிடு வேற்குளந் தங்கியவா [று]
அணிஅரு ளாதென்? அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 80

விதிதன் கரங்கொண் டெழுதிய தாம்அவ் விதிவழியே
மதிகுன்றிச் சென்றுழல் வேற்கும்நின் பொற்றுணை வான்மலர்த்தாட்
பதிகொண்ட தொண்டர் கதிகொண்ட வாழ்வென்று பாலிப்பையோ
அதிகங்கொள் சீர்த்தி அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 81

நானில மேலமை மேலோர் தமக்கு நகைவரவோ
கானிட மார்புள் விலங்கினு மேகடைப் பட்டஎனை
மானிட னாகப் பிறப்பித் தனை ஒத்த மாண்அருளாய்
ஆனிடத் தாரோ டவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 82

துன்பொன் றுஅகிலச் சுடுசுரத் தூடுஉள் துடித்தயர்வேன்
முன்பொன்ற நின்பெருங் காட்சிதந் தின்றெனை மூடுமுடல்
என்பொன் று அறஉ௫ கும்படி யென்றன் இருதயத்துஉன்
அன்பொன் றருள்வாய் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 83

இருந்தமிழ் மாற்றம் பகர்வண்ண மிக்க இளங்குருந்தை
அருந்தமிழ் வெங்குண மேவுங் கராவும் அமரர்உண்ணும்
திருந்தமிழ் தன்னநங் நாவலர் கோன் அன்பிற் செப்பினிய
அருந்தமிழ் கொண்ட அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 84

நாயடி யேன்எனை ஆட்கொள்ள எய்தில், உன் நாண்மலர்ப்பொற்
சேயபொற் பாதம் சிவக்குமென் றச்சம் செனிக்கில், உன்றன்
நாயகன் உற்றுளன், ஏவிடக் கூசில்உன் நந்தனர்உண் [டு]
ஆயவர்க் கோதி! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 85

சிங்கஞ் சுமக்க வரும்நின்ன [து] ஆரணங் தேடரிய
அங்கஞ்சம் ஒக்கும் திருத்துணைத் தாட்கன்பி லாதவர்தாம்
பங்கஞ் சுமக்க வரும்பஞ்ச பூதப் பலம்பொறுத்த
அங்கஞ் சுமந்தேன், அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 86

செங்கோ கனகத் திருமாதும் நான்முகன் தேவியெனும்
பொங்கோகை நாமக ளுந்தவ மேது புரிந்தனர்கொல்?
பைங்கோ மளம்பெறும் நின்னரு ளார்பணி பண்ணியுன்றன்
அங்கோலம் காண்பார் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 87

நாறிடும் உன்தா மரைப்பதம் உள்ளத்தில் நாடில்இன்பம்
ஊறிடு கின்ற தெனக்கே யெனில், உளத் தூடன்பினால்
கோறிடுந் தொண்டர்கள் கொண்டிடும் ஓர்இன்பம் கூறுவதோ
ஆறியல் வோர்கொள் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 88

கொன்னே உலகக் கொடுநெறி யூடுஉழல் கோதுளத்தேன்
நின்னேயப் பாதம் நினைந்திடில் இன்பம் நிறைகின்றதால்
என்னேநின் பாதத்தில் நீவைத்து ளாய்அதை யான்உணர
அன்னே பகர்தி அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 89

கருமேனி கொள்பவர் காணாநின் தெய்வக் கமழ்விசையும்
திருமேனி கொண்டியல் இன்பினைத் தம்முளந் தேர்ந்தலவோ
இருமேனி தம்மை ஒருமேனி யாக இசையக் கொண்டார்
அருமேனி கொண்டார் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 90

பொற்பமை வுற்றநின் மேனியை உள்ளம் பொறித்துக்கொலோ
சிற்பர னென்றொரு பேர்வாய்ந் தனன்அரன் செம்பொன்முடி
வெற்பரை யன்புரி யுந்தவ மாகுமோர் மேனிகொள்வாய்
அற்பமை தொண்டர் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 91

வாக்குன் திருப்புக ழேபாட, என்றன் மனம்நினைய,
நோக்குன் துணையடி நோக்கச் செவிசொல் நுகர,என்றன்
மூக்குன் மணங்கொள, மெய்யுன் பரிசத்தின் மூழ்கவுமே
ஆக்குஉன் பரங்காண் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 92

நின்னடிக்கு அன்பில னாயினும் நின்புடை நேர்ந்திடுவான்
உன்னடி யேன்என தெண்ணம்முற் றாக உதவியென்றும்
பொன்னடி மைப்படும் புல்லரை ஓர்பொரு ளாமதியா
அந்நல மீந்தாள்! அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 93

பாடிடுந் தோறும் பரானந்த இன்பம் பரவிநெஞ்சை
மூடிடும் நின்பெரும் சீர்பாடி டுஞ்செயல் மோசி,இடு-
காடிடு வார்தமைப் பாடிடு வார்கங்கை விட்டுஅங்கணம்
ஆடிடு வார்கள்; அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 94

மலைவாயி லார்புகழ்ந் தேத்தும்நின் சீலம் வழுத்தும்ஒப்பில்
கலைவாயி லாமதி யீனர்அன் றோஇந்தக் காசினிக்கண்
புலைவாயி லாவன எங்குண்[டு] அங் கங்கு புகுந்துபுகுந் [து]
அலைவா யிலாதோர்? அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 95

எந்தப் பொழுதில் எனைக்கொண்டு எதுசெய எண்ணினைகொல்
அந்தப் பொழுதில் அதைப்புரி கின்றதை அன்றிஎற்குஓர்
சொந்தச் செயல்இன்று எனும் உண்மை தன்னைத் துணிந்தறிந்தேன்
அந்தப் படச்செய் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 96

கருநாட மன்னனுள் நீயிருந் தன்று கழறியதோர்
தருநாடர் தேர்வரி தாம்புகழ் சீர்ச்சுத்த சாதகத்தில்
கருநாட மைதல்இல் லாஅருள் மேனி கவின்றுன்நற்றாள்
அருள்நா டுறச்செய் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 97

சரணம் சரணத் துணைகட்கு யான், என்நற் றாய்எனைநீ
கரணங்கள் யாவும் கடந்தோர் அறிவினிற் காண்டரும்ஓர்
மரணம் பிறப்பற் றியல்மெய்த்த சுத்தசன் மார்க்கத்தில்சேர்
அரணம் பொலிசீர் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 98

படைக்கலம் ஏந்திந் திரன்வாழ்வு வேண்டிலன் பஞ்சபுல
நடைக்கல மந்தனன் தாயேநின் கட்கடை நாடிநின்தா-
ளிடைக்கலக் கும்படி செய், துணை வேறின்றி யான்உனக்கே
அடைக்கல மானேன் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 99

குற்றம் செயலென் குணமெனில் ஆமெனக் கொள்நருண்டாற்
செற்றம் செயல்உனக் கேற்றதென்று ஆர்நிற்குச் செப்புநரே
நிற்றஞ்ச மென்றடை வேன்வினை நீயன்றி நீக்குநர்யார்
அற்றஞ் செயருள் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே! 100

பொன்னே மணியே அருள்வாரி வாரிப் பொழிபுயல்நேர்
மின்னே பரமன் உளமுருக் குஞ்சொல் வியன்கிளியே
மன்னே மரகத மேஒப்பி லாஅருள் மாணிக்கமே
அன்னே அபயம் அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே. 101

## காப்புச்செய்யுளின் உரை

**கராவால் நுந்து அ சுதர்** - முதலையால் விழுங்கப்பட்டு இறந்துபோன அந்த அந்தணச் சிறுவனை

**கால் புக்கொளி அவிநாசிக்கண்** - (சுந்தரர் தேவாரத்தால் உயிரும் வளர்ச்சியும் பெற்ற மைந்தனாக) மீண்டும் உமிழச்செய்த தலமாகிய புக்கொளியூர் அவிநாசியிடத்தில், ஏஅசை

**விராவு ஆனந்த கருணம்பிகை** - திருக்கோயில் கொண்டுள்ளவராகிய இன்பவடிவினரான கருணாம்பிகையம்மனுடைய

**அம்புயமேல் அணியும்** - *இரட்டுறமொழிதலாக அழகிய தோள்களில் புனையும், தாமரைபோன்ற திருவடிகளில் சூடும் என இரு பொருளும் கொள்க.*

**பரவான் அந்தக் கவிமாலை ஒன்று** - *தோத்திரமாக அமைவதால் அழகு பெற்றதாகிய பாமாலை ஒன்றினை (இப்பனுவலை)*

**இராமானந்தக்குரு தேசிகன் செம்பொன் இணையடியே** - *பொருள் வெளிப்படை*

**அன்பில் பகர்ந்திடும்** - *தன் கருணையால் என்னைக் கருவியாகக் கொண்டு சொல்லவைக்கும், ஆல் அசை*

குறிப்பு :- செம்பொன் இணை அடியே அம்புயமேல் அணியும் கவிமாலை ஒன்று அன்பில் பகர்ந்திடும் என்பது முடிபு. குருநாதரின் கருணையே இந்தப் பனுவலைப் படைக்கிறது, இதில் தன்பெருமை எதுவும் இல்லை எனத் தற்போதம் நீங்கிய நிலையைச் சுட்டியவாறு, இணையடியே என்புழி ஏகாரம் பிரிநிலை, என் கல்வி அன்று என்பதை உணர்த்தியது.

சுந்தரர் முதலையுண்ட பாலனை மீட்ட வரலாறு வெளிப்படை. கால்புக்கொளி – வினைத்தொகை. அம்புயம் திருவடிகளைச் சுட்டிடும் போது உவம ஆகுபெயர். பராவு ஆன் – மூன்றன் உருபேற்ற முதனிலைத் தொழிற்பெயர். இறைவிதுதியாக அமைந்துள்ளதே இம்மாலையின் எழில் என்றவாறு.



## 6. கருணாம்பிகை யமகவந்தாதி
## மூலமும் உரையும்

### உரைக்காப்பு

(கட்டளைக்கலித்துறை-திரிபு)

**நெருங்கரு ணாலைய மேமுதல் யாவும் நினைப்பவருக்**
**கொருங்கரு ணாலையத் தன்மலர்ப் பாத முதவிடுமால்;**
**மருங்கரு ணாலைய னின்புறப் புக்கொளி வாழுமையாம்**
**பெருங்கரு ணாலையச் செல்வி யமகம் பிறங்குறையே.**

**நெருங்கர் உண்ணா லயமே முதல் யாவும்** - *(சரியை முதலியவைகளால் இறைவனை) நெருங்கியிருப்பவர்கள் துய்க்கின்ற பரமுத்தி முதலிய அனைத்தையும்*

**நினைப்பவருக்கு ஒருங்கு அருள்**-*(தன்னை) தியானிப்பவர்களுக்கு ஒரே சமயத்தில் கொடுத்தருளும்*

**நால் ஐ அத்தன்** - *தொங்குகின்ற அழகிய துதிக்கையை உடைய விநாயகரின்*

**மலர்ப் பாதம்** - *தாமரை போன்ற திருவடிகள்*

**மருங்கு அருண ஆலயன்** - *பக்கத்திலே உள்ளவரும் செம்மை நிறத்துக்கு இடமாக உடையவரும் ஆகிய சிவபெருமான்*

**இன்புற புக்கொளி வாழ் உமை ஆம்** - *மகிழும் வண்ணம் அவிநாசிப்பதியில் கோயில்கொண்டுள்ள உமா தேவியாராகிய*

**பெருங்கருணாலயச் செல்வி யமகம்** - *பெருங்கருணாம்பிகை விஷயமாக ஸ்ரீலஸ்ரீ கந்தசாமி சுவாமிகளால் இயற்றியருளப் பெற்ற இந்த யமகவந்தாதியின்*

**பிறங்கு உரை. ஏ** - *விளக்கமான உரையை*

**உதவிடும் ஆல்** - *(சிந்தையில் நின்று) கொடுத்தருளும்*

குறிப்பு:- யமகம் பிறங்கு உரை பாதம் உதவிடும் என இயைக்க. சிவபிரான் செம்மேனியம்மான் ஆதலின் அருணாலயன் எனப்பட்டார். ஒன்று மூன்று நான்காம் அடிகளில் லகரத்திற்குப்பதில் போலியாக லைகாரம் பயின்றது. ஆல், ஏ-அசைகள்.

## நாற்காப்பு

கருணாம் பிகைய மகவாகச் செய்து கலக்குமலக்
கருணாம் பிகைய மகத்துவஞ் சால்பொற் கழற்றுணையாங்
கருணாம் பிகைய மகமூ டளித்துக் கடைக்கணித்தாள்
கருணாம் பிகைய மகவந்தா திக்கைங் கரன்றுணையே.

**கரு உள் நாம் பிகைய** - *(மீண்டும் மீண்டும்)பிறவியில் நாம் கட்டுறும்படி*
**மகவு ஆக செய்து கலக்கும்** - *(நம்மை)குழந்தையாக்கி வருத்துகின்ற*
**மல கருள் நாம்பிகை** - *மூலமலமாகிய காராணவம் தன்வலி யொடுங்கி இளைத்து வெறுப்படைவதாகிய*
**அ மகத்துவம் சால்** - *அந்தச் சிறப்பினைப் பெற்ற*
**பொன்கழல் துணை ஆம் கருண அம்பி** - *அழகிய இரு திருவடிகளாகிய கருணை மயமான படகை*
**கை அம் அகம் ஊடு அளித்து** - *(தமக்குரிய) ஒழுக்கத்தின் அழகு பெற்ற மனதின்கண் விளங்கும்படிக் கொடுத்தருளி*
**கடைக்கணித்து ஆள்** - *கடைக்கண்பார்வையைச்செலுத்தி (நம்மை) ஆட்கொண்டருளும்*
**கருணாம்பிகை யமக அந்தாதிக்கு** - *(திருப்புக்கொளியூரில் எழுந்தருளியுள்ள) கருணாம்பிகை விஷயமான இந்த யமகவந்தாதிப் பிரபந்தத்திற்கு*
**ஐங்கரன் துணை ஏ** - *ஐந்து திருக்கரங்களை உடைய விநாயகப் பெம்மானே துணையாவார்*

குறிப்பு:– கருவுள் என்பது எதுகை நோக்கிக் கருள் என நின்றது. கருண + அம்பி = கருணாம்பி. வடமொழித் தீர்க்கசந்தி. பிறப்பைக் கடலாக உருவகஞ் செய்யாமையின் இது ஏகதேசவுருவகம்; பிறவிப் பெருங்கடல் நீந்துவர் என முப்பாலில் பிறவி கடலாகக் கூறப்பட்டு இறைவனடி தெப்பமாகக் கூறப்படாததைப் போன்றது இது.

*'. அவினாசி யப்பரி யல்வாழ்த்தப் புக்கொளி யாந்தலத்தே*
*யவினாசி யப்பரி யானம்பி லென்றரி யைக்கொளுஞ்சீ*
*ரவினாசி யப்பரி டம்வல மாக வமர்ந்தருளு*
*மவினாசி யப்பரி யாருமை யேகரு ணாம்பிகையே*

**ч வில் நாசி அப்பர்**-*(மிதிலையில் இருந்த)அந்தச் சிவதனுசை ஒடித்த திருமாலும் (உலகங்களை எல்லாம் பெற்ற) பிரமனும்*
**ியல் வாழ்த்த** - *தன் கீர்த்தியைப் போற்றும் வண்ணம்*
**|க்கொளியாம் தலத்தே** - *திருப்புக்கொளியூரில்*
**чவினாசி** - *(பேரூழியிலும்) அழிவற்றவராகவும்*
**чப்பு அரியான்**-*(தன் சடையில்) கங்கையையும் பிறையையும் அணிந்தவராகவும்*
**чம்பில் என்று அரியை கொளும் சீர்** - *(முப்புர சங்காரத்தில்) பாணமாகத் திருமாலைக் கொண்ட சிறப்பினை உடையவராகவும்*
**чவினாசியப்பரிடம்** - *எழுந்தருளியுள்ள அவினாசியப்பரென்னும் திருநாம முடைய சிவபெருமானின்*
**பலமாக அமர்ந்து அருளும்** - *வலப்பக்கத்தே வீற்றிருந்து நமக்குத் திருவருள் புரிபவராகிய*
**чவினா**- *இறைவனை விட்டு நீங்காத சக்தியே!*
**ியபரி ஆர் உமையே** - *சிங்கவாகனத்தை உடைய உமாதேவியே!*
**ருணாம்பிகையே** - *கருணாம்பிகைத் தேவியே!*

நறிப்பு:- அவில் என்புழி அ பண்டறி சுட்டு. வில் நாசி, அப்பர் இரு இடங்களிலும் எண்ணும்மைகள் தொக்கன அம்பில் என்று என்புழி உருபுமேல் உருபு. அவினாசியப்பர் - இயற்பெயர். இடம் வலமாக அமர்ந்தருளும் என்றது சொல்முரண். சீயம் என்ற சொல் தறுக்கல்விகாரம் பெற்றுச் சியம் என நின்றது. "அடியேங்களுக்குத் திருவருள்புரிக" என்பது இசையெச்சம்.

**2. கையகத் தாக்கந் தனக்காக வீனக் கயவரைக்காக்**
**கையகத் தாக்கந்தர்ப் பாதன்ம மேகவா காவெனக்காக்**
**கையகத் தாக்கந் தகர்புக் கொளிக்கரு ணாம்பிகைதாட்**
**கையகத் தாக்கந்தஞ் சேர்க்குதி ருண்மைக் கதியுமுண்டே.**

**கை அகத்து ஆக்கம் தனக்காக** - *(அவர்கள்) கையில் உள்ள பொருளில் (ஒரு சிறிது) பெறுதல் வேண்டி*

**ஈனக் கயவரை** - *இழிகுணமுள்ள தீயவர்களை*

**காக்கு ஐய, கத்தா, கந்தர்ப்பா** - *காத்தல் தொழிலுடைய திருமாலே, தலைவனே, கந்தர்வனே,*

**தன்ம, மேகவாகா என** - *அறக்கடவுளே, இந்திரனே என்று பலவாறாக*

**காக்கை அ கத்து ஆக்கு அந்தகர்** - *காகத்தைப் போலக் குரல் எழுப்பிப் பாடும் (அறிவுக்கண் அற்ற) குருடர்களே!*

**புக்கொளி கருணாம்பிகை தாள்** - *அவிநாசிக் கருணாம்பிகையின் திருவடிகளை*

**கை அகத்து ஆக்கு அந்தம் சேர்க்குதிர்**- *(உங்களுடைய) ஒழுக்கம் நிறைந்த உள்ளத்திலே நிலைபெறச் செய்வதாகிய அழகை ஈட்டிக் கொள்ளுங்கள்*

**உண்மை கதியும் உண்டு ஏ** - *அழிவற்ற வீட்டுப்பேறும் கிடைக்கும்*

குறிப்பு : அந்தகர்–இயல்பு விளி. கதியும் உண்டே என்பதில் இறந்தது தழுவிய எச்சவும்மை "இம்மையே தருஞ்சோறும் கூறையும்" என்பதனை உணர்த்திநின்றது "கண்ணுடையர் என்பவர் கற்றோர்" "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்" என்பனவற்றை நினைந்து மானிடம்பாடுவோரை அந்தகர் என்றார். ஒழுக்கம் இல்லாத உள்ளத்திலே இறையருள் பதியாதாகலின் கை அகத்து என்றார். இதற்கு உடனே உம் உள்ளத்தில் சேர்க்குதிர் எனினுமமையும்.

**1. கதிக்கட்டங் தங்கநித் தச்சட லத்தின் கணக்கொடிச்ச**
**கதிக்கட்டங் தங்கடக் கும்பெரு வன்மையுங் காணுமில**
**கதிக்கட்டங் தங்க வுலகியல் புங்கரு ணாம்பிகைதாட்**
**கதிக்கட்டங் தங்கண் விளங்குங்கை யாமல கத்தினன்றே**

**கதி கட்டம் தங்கு** - *பிறவித்துன்பத்தை நிலையாகப்பெற்றதும்*
**அநித்த சடலத்தின் கணக்கொடு**- *நிலையாததுமாகிய இவ்வுடலின் முடிவுடன்*
**இச் சகதி கட்டு அந்தம் கடக்கும்** - *இந்தச் சேறுபோன்ற பாசத்தின் கடைசி எல்லையையும் தாண்டுகின்ற*
**பெரு வன்மையும் காணும்** - *பெரிய வலிமையையும் உண்டாக்கும்.*
**இலகு திக்கு அட்டம் தங்கு அ உலகு இயல்பும்** - *விளங்குகின்ற எட்டுத் திசைகளையும் ஆள்கின்ற அந்த உலகியலாற்றலும்*
**கருணாம்பிகை தாள்**- *கருணாம்பிகையின் திருவடிகளின்*
**கதி கட்டு அந்து அங்கண்** - *ஆதரவாகிய பாதுகாப்பு (ஒருவருக்குப்) பொருந்துகின்ற அப்பொழுது*
**கை ஆமலகத்தில் நன்று விளங்கும்** - *உள்ளங்கை நெல்லிக்கனி போல மிகத்தெளிவாக உண்டாகும்*

குறிப்பு : – சடலத்தின் கணக்கொடு என்றது இப்பிறவியோடு என்றபடி. தாள் கதிகட்டு அந்து அங்கண் வன்மையும் காணும்; உலகியல்பும் விளங்கும் என இயைக்க. அட்டதிக்கு எனற்பாலது திக்கு அட்டம் என நின்றது இலக்கணப்போலி. ஈண்டு முற்றும்மை தொக்கது. ஈற்றேகாரம் அசை.

இனி கை ஆமலகத்தின் அன்றே எனப்பிரித்து, பொருந்தும் அந்த நாளிலேயே எனினும், விளங்கும் கை ஆமலகத்தின் என நிறுத்தி அன்று, ஏ என்பவைகளை அசை எனினும் ஆம்.

4. கத்துந் திரைக்கணஞ் சூழ்கடற் பாரொடு காந்தியரங்
கத்துந் திரைக்கமஞ் சேர்வார்த் திகங்கண்டுங் காதல்கைம்மி
கத்துந் திரைக்கலைந் தாய்புக் கொளிக்கரு ணாம்பிகைய
கத்துந் திரைக்கவின் காணுதி யின்பக் கணம்வருமே

**கத்தும் திரைக்கணம் சூழ் கடல் பாரொடு** - ஓலமிடுகின்ற அலைக் கூட்டங்கள் நிறைந்த சமுத்திரத்தால் சூழப்பட்ட உலகத்தின்கண்

**காந்தியர் அங்கத்தும் திரை கமம் சேர்**- அழகிய பெண்களின் உடலிலும் தோற்சுருக்கம் நிறைந்து சேர்கின்ற

**வார்த்திகம் கண்டும்** - முதுமையைக் கண்கூடாகப்பார்த்தும் கூட

**காதல் கைமிக அ து உந்து இரைக்கு அலைந்தாய்**- ஆசைமிக அதிகமாக அந்த விஷயானுபவத்திற்செலுத்துவதாகிய உணவை நாடித் திரிந்தாய்

**அகத்து உந்து இரு ஐ** - (உன்) மனதில் வளர்கின்றதும் பெரியதும் தலைமையானதுமாகிய

**புக்கொளிக்கருணாம்பிகை** - அவிநாசிக் கருணாம்பிகையின்

**கவின் காணுதி** - அருள் அழகை (எண்ணிப்) பார்ப்பாயாக.

**இன்பு அக்கணமே வரும்** - (அப்படிப்பார்த்தால்) அந்த விநாடியே உனக்குப் பெருமகிழ்வு உண்டாகும்.

குறிப்பு: – பாரொடு என்புழி மூன்றன்உருபு ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்த உருபு மயக்கம். இனிப் பாரொடு அங்கத்தும் வார்த்திகம் சேர் என உடனிகழ்ச்சியாக்கின் அமையாதோ எனின் உலகத்தின் முதுமை காந்தியரின் முதுமைபோல அத்துணைக் கண்கூடாகத் தோன்றாமையின் அது சிறந்ததாகாது. வருமே என்பதின் ஏகாரத்தைக் கணம் என்பதுடன் கூட்டுக. பிரிநிலை ஏகாரம். ஐம்புலஇன்ப நாட்டத்திற்கு அடிப்படையாய் இருப்பது உண்டியே யாதலின் து உந்து இரை என்றார். து – அனுபவம். புறக்கண்ணால் காண்பதைவிடத் தியானித்தலே பயனுடையதாதல் பற்றி அகத்துக் கவின் காணுதி என்றார்.

5. கணங்கொண் டலமரு துன்பநெஞ் சீது கடைப்பிடியாய்
கணங்கொண் டலடிப்பா ரென்றுடி யன்றெனிற் கள்வனசக்
கணங்கொண் டலனமெய் யன்றங்கை யென்கரு ணாம்பிகையைக்
கணங்கொண் டலத்தமை யுங்கதி நாமின்று கைக்கொளவே.

**கணம் கொண்டு அலமரும் துன்ப நெஞ்சு** - *பேய் போலத் திரியும் வருந்துகின்ற (என்) நெஞ்சமே!*

**ஈது கடைப்பிடியாய்** - *இவ்வார்த்தைகளை உறுதியாகப் பற்றிக்கொள்;*

**அல்கொண்டு அடு இ பார் கணம் என்று உள்தி** - *அறியாமையைக் கொண்டு தோற்றுவிக்கப்பட்ட இவ்வுலகம் (நிலையில்லாமல்) ஒரு நொடியில் அழியுந் தன்மையது என நினைப்பாயாக.*

**அன்று எனில்** - *இது உன்னால் இயலவில்லையென்றால்*

**கள் வனசக் கண்**- *தேன்நிறைந்த தாமரை போன்ற விழிகளையும்*

**அம் கொண்டல் அன மெய்யன்** - *அழகிய மேகம் போன்ற (நீலத்) திருமேனியையும் உடையவராகிய திருமாலின்*

**தங்கை என் கருணாம்பிகையை கண்** - *இளைய சகோதரியாகிய கருணாம்பிகையை (உள்ளத்தால்) கருது.*

**அங்கு ஒண்டு** - *அவ்விடத்திலேயே தியானத்தால் ஒருமுகப்படு*

**நாம் இன்றுஏ அலத்து அமையும் கதி கைக்கொள** - *(அறிவாகிய) நானும் நீயும் இத்தினமே அழியாத்தன்மை பெற்றுவிளங்கும் வீட்டின்பத்தை அடைவதற்கு*

குறிப்பு:- நெஞ்சு! ஈதுகடைப்பிடி; உள்தி; அன்று எனில் கண்; கைக்கொளவே ஒண்டு என இயையும். நெஞ்சு-அண்மைவிளி. கணம் கொண்டு அல் அடு இ பார் எனப் பிரித்துக் கன்மம், மாயைகளாகிய கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டு ஆணவமலம் சமைத்த உலகம் எனினுமாம். இதில் ஆணவ நீக்கத்திற்காக அமைந்த உலகை அது படைத்தது என்றது உபசார வழக்கு, இருள் தந்த ஒளி என்புழிப்போல, உலக இன்பங்களையெல்லாம் வெறுத்துத் துறவுநெறியைக் கைக்கொள். அஃது இயலாவிடில் தேவியின் நினைவு நீங்காமல் உலகியலில் ஈடுபடு எனத் தன் நெஞ்சிற்கு உணர்த்துவாராய் உலகினருக்கு உபதேசிக்கின்றார். முன்னது நிவிருத்தி மார்க்கம் எனவும் பின்னது பிரவிருத்தி மார்க்கம் என்றும் கூறப்பெறும். கொள என்பதிலுள்ள ஏகாரத்தை இன்று என்பதனோடு இயைக்க. பிரிநிலை. முதலடியில் கொண்டு உவமஉருபு.

6. கைக்குஞ் சரமங் களமெய்யன் காண்பறக் காமனிக்கு
கைக்குஞ் சரமங் களலரிக் கீகரு ணாம்பிகையைக்
கைக்குஞ் சரமங் களபத்தொ டார்தெருக் கண்ணெழிலார்
கைக்குஞ் சரமங் களகண்ணர் புக்கொளிக் கண்டிறைஞ்சே.

**களமெய்யன் காமன்** - *கரிய உடலினனாகிய மன்மதன்*

**கைக்கும் சரமம் காண்பு அற** - *(சிவபெருமானின் தீவிழியால்)வெறுக்கத் தக்க இறப்பைக் காணாதபடி (சாகாவண்ணம்)*

**இக்கு உகைக்கும் சரம்** - *(அவனுடைய) கரும்புவில் எய்யும் (மலர்க்) கணைகளை*

**அ கள் அலரிக்கு ஈ** - *அந்தத் தேனை உண்கின்ற (மாரன்வில் நாணாகிய) வண்டிற்குக் கொடுத்தருளிய*

**கருணாம்பிகையை** - *பெருங்கருணாலயச் செல்வியை*

**கை குஞ்சரம் அம் களபத்தொடு ஆர்** - *துதிக்கையை உடைய ஆண்யானைகள் அழகிய பெண்யானைகளோடு திரிகின்ற*

**தெருக்கண்** - *வீதிகளில்*

**எழில் ஆர் கை குஞ்சர மங்கள கண்ணர்** - *அழகு நிறைந்தவர்களும் (மையால்) அலங்கரிக்கப்பட்ட குவளைமலர்களைப் போல் பொலிகின்ற கண்களை உடையவர்களுமாகிய பெண்கள் கூட்டம் மிகுந்துள்ள*

**புக்கொளி கண்டு இறைஞ்சு ஏ** - *திருப்புக்கொளியூரில் தரிசித்துப் பணிவாயாக*

குறிப்பு:- நெஞ்சே-தோன்றா எழுவாய். ஏ-ஈற்றசை. அக்கள் அலரிக்கு என இருத்தற்பாலது அங்கள் என வந்தது யமகம் நோக்கிய மெலித்தல்விகாரம். மாரனுக்குக் கணைகள் அருளியதை அவன் நாணிற்குத் தந்ததாகக் கூறியது உபசாரவழக்கு, வாளுக்குத் தோற்றான் என்புழிப்போல.

7. **கண்டனங் கம்பு மொழிநடை கந்தரக் கன்னியரைக்
கண்டனங் கம்பு துளைக்கநெஞ் சேங்கிடு காமுகர்மைக்
கண்டனங் கம்புன் சடையவி நாசி கவின்றவப்பர்
கண்டனங் கம்புண ருங்கரு ணாம்பிகைக் கண்ணிலரே.**

**கண்டு அனம் கம்பு** - *கற்கண்டும் அன்னப்பறவையின் நடையும் சங்கும்*
**மொழி நடை கந்தர கன்னியரை** - *(முறையே) சொல்லினிமையிலும் நடையழகிலும் கழுத்தின் அழகிலும் நிகர்க்கும் பெண்களை*
**கண்டு அனங்கு அம்பு துளைக்க** - *பார்ப்பதினால் மன்மதன் கணைகள் பாய*
**நெஞ்சு ஏங்கிடு காமுகர்** - *மனஏக்கம் கொள்ளுமியல்புடைய காமிகள்*
**மை கண்டன் அம் கம் புன்சடை** - *நீல நிறம் பொருந்திய கழுத்துடையவரும் அழகிய நீர்(கங்கை) பொருந்திய சடையையுடையவரும்*
**அவிநாசி கவின்ற அப்பர்** - *அவிநாசியில் எழுந்தருளியுள்ளவரும் நம் அனைவருக்கும் தந்தை அனையவரும்*
**கண்டன்** - *எல்லோருக்கும் தலைவருமாகிய சிவபெருமானின்*
**அங்கம் புணரும்** - *(இடப்பாகச்) சரீரத்தில் இணைந்துள்ள*
**கருணாம்பிகைக் கண் இலர் ஏ** - *கருணாம்பிகையைத் தரிசிக்கப் பெற்ற விழிகளை இல்லாதவரே ஆவர்*

குறிப்பு : முதலடியில் நிரனிறை பயின்றது. காமுகர் கண்இலர் என்பது பொருண் முடிவு. கருணாம்பிகைக்கண் என்புழி இரண்டன் உருபும் பயனும் உடன்றொக்க வேற்றுமைத்தொகை. இனிக் கருணாம்பிகைக்கு அண்ணிலரே எனப் பிரித்துத் தேவியை நெருங்காதவர்களே எனினும் ஆம். இப்பொருளில் உருபுமயக்கம். ஈற்றேகாரம் பிரிநிலை; கண்உடையவர்களை வேறுபடுத்தி அவர்கள் நெஞ்சு ஏங்கமாட்டார்கள் என அறிவிக்கிறது.

**8. கண்ணற் றுணங்கற லார்கடத் தாலிடைக் கட்செவியாக்**
**கண்ணற் றுணங்க விடுத்தரு ளுங்கரு ணாம்பிகைநிற்**
**கண்ணற் றுணங்க முடையாரிற் கூட்டிடல் காதலன்பர்க்**
**கண்ணற் றுணங்கறல் கண்டின்ப மெய்தக் கடைக்கணியே**

**கண் அல்** - *(தீமைபுரிவதில்) பெருமைபெற்ற ஆணவமலத்தை*
**துணங்கறல் ஆர் கடத்தால் இடை கட்செவி** - *இருள்நிறைந்த குடத்தில் சிக்கியதால் வருந்தும் பாம்பைப்போல*
**ஆக்கு அண்ணல்** - *செயல்பட முடியாமல் ஒடுக்குகின்ற சிவபிரானை*
**துணங்க விடுத்து** - *திருக்கூத்தாடவைத்து*
**அருளும் கருணாம்பிகை** - *(அதைத்தான் தரிசிப்பதன் மூலம்) உயிர்க் கூட்டங்களுக்குத் திருவருள் புரியும் கருணாம்பிகையே!*
**நின் கண் அற்று** - *உம்மைக் கருதுவதை விட்டொழித்து*
**உண் அங்கம் உடையாரில் கூட்டிடல்** - *வீணாகஉண்டு மட்டுமே வாழும் உடலுடையவர்களோடு (அடியேனைச்) சேர்த்து விடாதே;*
**காதல் அன்பர்க் கண்** - *உன்மீது மெய்யன்புடைய அடியாரைப் பொருந்துதலாகிய*
**நல் துணங்கறல் கண்டு** - *இனிய திருவிழாவைப் பெற்று*
**இன்பம் எய்த கடைக்கணி ஏ** - *(அடியேன்) பேரின்பம் பெறும் வண்ணம் கடைக்கண் நோக்கம் தந்தாண்டருள்வாயாக.*

குறிப்பு : ஆணவம் உள்பொருளாதலின் அழியாது; இறைவனால் ஒடுக்கப்படும். இதற்கே குடத்திலடைத்த பாம்பு உவமையாயிற்று. இறைவி இறைவனின் திருக்கூத்தைப் "பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென நோயுண் மருந்து தாயுண்டாங்கு"த்தான் கண்டு உயிர்களுக் கருள் பாலிப்பதைச் சைவ நூல்களிற் காண்க. உண் அங்கம் உடையார் என்றது உண்ணுதலை மட்டுமே பயனாகக் கருதுகின்ற உடலபிமானிகள் என்றபடி. உண்ணுதல் பிற புலனுகர்ச்சிகளுக்கும் உபலக்ஷணம். மெய்யடியார்களின் சேர்க்கை இன்பமளிப்பதாகலின் அதனைத் திருவிழா என்றார். கருணாம்பிகை– அண்மைவிளி. ஏகாரம் அசை. கருணாம்பிகை! கூட்டிடல், கடைக்கணி என்பது முடிவு.

9. **கடைப்பட விப்பிர பஞ்சமெய் யென்று களித்திடுஞ்ச**
**கடைப்பட விப்பிர வாழ்வையென் ணேலது கன்னியர்சாக்**
**கடைப்பட விப்பிர விற்றள்ளு நங்கரு ணாம்பிகைதாட்**
**கடைப்பட விப்பிர வாசங் கொளின்பக் கடலதுவே**

**கடைப்பட இ பிரபஞ்சம் மெய் என்று** - *மிகக்கீழ்மையான இந்த உலக இன்பத்தை உண்மையென்று எண்ணி*

**களித்திடும் சகடைப்பட விப்பிர வாழ்வை எண்ணேல்** - *மகிழ்வதாகிய வண்டிச்சக்கரம் போலச் சுழலும் வாழ்க்கையைப் பெரிய இன்பமாகக் கருதாதே;*

**அது கன்னியர் சாக்கடை பட விப்பிரவில் தள்ளும்** - *அக்கருத்து பெண்களின் கழிவுநீர்ப்பாதையாகிய (அல்குல் என்னும்) பாம்புப்படத்தை (விரும்புவதாகிய) பிழையில் ஈடுபடுத்தும்*

**நம் கருணாம்பிகை தாட்கு அடை** - *நமது கருணாலயச்செல்வியின் திருவடிகளைத் (தஞ்சமாக) அடைவாயாக*

**பட விப்பிர வாசம்கொள் இன்பக்கடல் அதுவே** - *வெற்றிதருவதும் அழகியதும் (ஞான) மணம் வீசுவதுமாகிய பேரின்ப சமுத்திரம் அத்திருவடிகளேயாகும்.*

குறிப்பு : சகடை–சக்கரத்திற்கு ஆகுபெயர்; தாட்கு அடை வேற்றுமை மயக்கம்; ஈற்றேகாரம் பிரிநிலை. நெஞ்சே–தோன்றா எழுவாய். உலக இன்பத்தில் ஆழ நினைத்த உள்ளத்தை நோக்கி உபதேசிப்பதால் இ பிரபஞ்சம் என அண்மைச்சுட்டாலும் கடல் அதுவே எனச் சேய்மைச்சுட்டாலும் குறிக்கிறார். ஒன்றைச் சாக்கடை என்றதற்கு மறுதலையாக இறைவியின் திருவடிகளை வாசம்கொள் இன்பக்கடல் என்றார். கன்னியர் என்றசொல் மகளிர் எனப் பொதுப்பொருளில் வந்தது. புலன்களை வெல்லுதலாகிய வெற்றியையும் அருளாகிய அழகினையும் ஞானமாகிய நறுமணத்தையும் அத்திருவடிகள் அருளும் என்றபடி.

10. கடத்தினைக் காவல் புரிவாள் தொழுங்கரு ணாம்பிகைசங்
கடத்தினைக் காவல் லபங்காட்ட வைவர் கலக்கமுற்றேன்
கடத்தினைக் காவல் லபத்தொழில் யாவையுங் கட்டொடறக்
கடத்தினைக் காவல் லவர்சேர் பெருநிலை காட்டியின்றே

**கட தினை காவல் புரிவாள் தொழும் கருணாம்பிகை** - *புனத்தினுள் தினைப்பயிரைக் காவல் காத்தவளாகிய வள்ளிநாயகியால் தொழப்படுகின்ற கருணாம்பிகையே!*

**ஐவர் சங்கடத்தின் நைக்கா** - *(அடியேனது) ஐம்புலன்களும் துன்பத்தால் என்னை மெலிவித்து*

**வல்லபம் காட்ட கலக்கம் உற்றேன்** - *(தத்தம்) வலிமையைக் காட்டுவதால் நான் மிக மனக்குழப்படைந்துள்ளேன்;*

**கடத்தின் ஐக்கு ஆவல் அபத்தொழில் யாவையும்** - *உடலின் அழகிற்கு ஆசைப்படுவதாகிய தீய செயல்கள் அனைத்தும்*

**கட்டொடு அற** - *முழுமையாக நீங்கும்படி*

**கடத்தினை** - *(என்னிடமிருந்து) நீக்கியவள் ஆகி*

**வல்லவர்சேர் பெரு நிலை காட்டி**- *(பக்திஞான வைராக்கியங்களில்) தேர்ந்தவர்களாகிய மெய்யடியார்கள் பெறுகின்ற மேலான வீட்டின்பத்தையருளி*

**இன்றே கா** - *இத்தினமே காப்பாற்றுவாயாக*

குறிப்பு:- ஐவர்-தொகைக் குறிப்புப்பெயர்; நைக்கா-செய்யா எனும் வாய்பாட்டு வினையெச்சம்; கடத்தினை - வினையெச்சமாகக் கா என்னும் வினைகொண்டு முடிந்தது. கருணாம்பிகை-அண்மைவிளி. கலக்கமுற்றேன் எனும் பயனிலைக்கு நான் தோன்றா எழுவாய்.

11. **காட்டிற் றிகைப்பர வும்புக் கொளிக்கரு ணாம்பிகையே**
**காட்டிற் றிகைப்படத் தேடியெந் நாளுமிக் காசினிக்கட்**
**காட்டிற் றிகைப்பமை புள்விலங் கேய்வன் கருத்தமைந்து**
**காட்டிற் றிகைப்பற் றளவாச் சுகமுட் கலக்கவின்றே.**

**காட்டு இல்** - எடுத்துக்காட்டாகக் கூற வேறு உவமையற்றதும் (இணையற்றதும்)
**திகை பரவும்** - எல்லாத்திசைகளாலும் புகழப்படுவதும் ஆகிய
**புக்கொளிக் கருணாம்பிகையே** - அவிநாசி வாழ் அன்னையே!
**எந்நாளும் காழ் திற்றி கைப்பட தேடி** - தினந்தோறும் குற்றம்பொருந்திய உணவுமட்டுமே அகப்படும்வண்ணம் நாடி
**இ காசினிக்கண்** - இந்த உலகத்தினிடையே
**காட்டில் திகைப்பு அமை புள் விலங்கு ஏய்வன்** - அடியேன் வனத்தில் மயங்குகின்ற பறவைகளையும் பிராணிகளையும் ஒத்தவன் ஆவேன்;
**கருத்து அமைந்து** - என் உள்ளத்தே நிலையாக எழுந்தருளியிருந்து
**இ கைப்பு அற்று** - (பிராணிகள் போன்ற) இந்த இழிதகைமை ஒழிந்து
**அளவா சுகம் உள் கலக்க** - எல்லையற்ற பேரின்பத்துட்பொருந்தும்படி
**இற்று** - (அடியேன் ஒழுகவேண்டியநெறி) இத்தகையது என்று
**இன்றே** - இத்தினத்திலேயே
**காட்டு** - போதித்தருளுவாயாக.

குறிப்பு:- இக்கவியின் சொற்களை ஏற்றபெற்றி கொண்டுகூட்டிக் கொள்க திகை முதலடியில் ஆகுபெயராக திசைகளிலுள்ள மக்களைஉணர்த்திற்று. திற்றி கைப்படத் தேடி என்புழிப் பிரிநிலை ஏகாரம் தொக்கது. ஆன்மநாட்டமின்றி உடலோம்பல் மாத்திரத்திலேயே கருத்தாயிருந்தமை தோன்றக் காழ்திற்றி என்றார். சுகம் + உள் = அத்துக்கெட்டுச் சுகமுள் என்றாயிற்று. அங்ஙனமின்றிச் சுகம் என்னுட்கலக்க என எழுவாய்த்தொடராக்கினும் அமையும். காட்டு இல், திகை பரவும் என்னும் இரு அடைமொழிகளையும் புக்கொளி என்பதனோடு இயைக்க. அன்றிக் கருணாம்பிகைக் காக்கினும் பொருந்தும். அப்போது புக்கொளிக்கருணாம்பிகை என்பது ஒருசொல் நீர்மைத்து. ஈற்றேகாரம் பிரிநிலை.

12. கலக்க மலக்கங் குலுட்டுளை வேன்கொள் கவலைகண்மி
கலக்க மலக்கங் குகரையில் லாகரு ணாம்பிகை நின்
கலக்க மலக்கங் குலவின்ப சாகரக் காற்றுணையிற்
கலக்க மலக்கங் குறுகிட வற்றிடக் காதரமே.

**கலக்க மல கங்குலுள் துளைவேன் கொள்** - *அச்சத்தைத் தருவதாகிய ஆணவ இருட்டினுள் வருந்துபவனாகிய அடியேன் கொண்டுள்ள*
**கவலைகள் மிக லக்கம்** - *வருத்தங்கள் பல நூறாயிரங்களாகும்*
**கருணாம்பிகை** - *கருணாம்பிகைத்தேவியே!*
**நின் கல கமல கம் குலவு** - *உன்னுடைய(சிலம்பு, மெட்டி முதலிய) அணிகளை அணியப்பெற்றதும் தாமரைமலர் போன்றதும் ஞானத்தோடு விளங்குவனவும்*
**அல கங்கு கரையில்லா (இரண்டாம் அடிப்பகுதி)** - *எக்காலத்தும் அழியாமல் நிலைபெற்றிருப்பதும் எல்லையில்லாததுமாகிய*
**இன்ப சாகர கால் துணையில் கலக்கு** - *பேரின்பக்கடலாகிய திருவடியிணையில் (அடியேனைச்) சேரப்புரிவாயாக.*
**அக்கம் அ மல் குறுகிட** - *(அடியேனின்) ஆன்மா (ஆணவம் புரிகின்ற) அந்தப்போர் குறையும்படியாகவும்*
**காதரம் வற்றிட** - *(என்) தீவினைத்தொடர்புகள் இல்லாமற் போகும் வண்ணமும்.*

குறிப்பு : இக்கவியின் சொற்களை ஏற்றபெற்றி கொண்டுகூட்டிக் கொள்க. கருணாம்பிகை! என் கவலைகள் லக்கம். மல் குறுகிட காதரம் வற்றிட நின் காற்றுணையிற் கலக்கு என்பது பொருண்முடிபு. அல, கரையில்லா என்னும் எச்சங்கள் இன்பசாகரம் என்பதைக் கொண்டும் கல, கமல, கம்குலவு என்பன காற்றுணை என்பதைக் கொண்டும் முடிந்தன. குறுகிட வற்றிட என்பனவற்றுள் எண்ணும்மை தொக்கன. ஈற்றடியில் அ பண்டறிசுட்டு. ஏகாரம் அசை. இறைவியின் திருவடிகளே வீடாகும். அது நிலையுண்மை, அறிவு, இன்பமயமாகும்; இதனை முறையே அல, கம் குலவு, இன்ப சாகர எனக் குறித்தார். இதுவே சத், சித், ஆனந்தம் எனப்படும்.

13. *காதர மங்கள வற்றவை கொள்பவர் கன்னியர்கண்*
*காதர மங்களலரேயென் பார்கரு ணாம்பிகைசு*
*காதர மங்கள கௌசிகப் புக்கொளிக் காமர்சொல்வோர்*
*காதர மங்கள மாமலர் மெய்க்கதி காண்பவரே*

**காதரம் அளவு அற்றவை கொள்பவர் அங்கு** - *தீவினையை எல்லையில்லாது பெற்றிருப்பவர்கள் அந்நிலையில்*
**கன்னியர் கண் காது** - *மகளிரின் விழிகளும் செவிகளும்*
**அரம் அம் கள் அலரே என்பார்**- *(கூர்மையிலும் மென்மையிலும் முறையே) அரத்தையும் அழகிய தேன் நிறைந்த மலரையும் ஒக்கும் என்பார்கள்.*
**கருணாம்பிகை சுக ஆதர** - *கருணாம்பிகைத் தாயார் இன்பமாக எழுந்தருளியிருக்கும் இடமாக விளங்குவதும்*
**மங்கள கௌசிக புக்கொளி** - *எல்லா நன்மைகளையும் பெற்றதும் பண்ணோசை நிறைந்ததுமாகிய அவிநாசித்தலத்தின்*
**காமர் சொல்வோர்** - *(தெய்வீகமான) அழகைப் பேசுபவர்களே*
**கா தரம் மங்கு அள** - *சுவர்க்கத்தினுடைய தகுதியும் குறையும் வண்ணம் பெருஞ்சிறப்பு வாய்ந்ததும்*
**மா மலர் மெய்க்கதி காண்பவர்** - *ஞானம் விரிகின்றதும் நிலையானதுமான முக்தி நிலையைப் பெறுபவர் ஆவர்.*

குறிப்பு: காதரம் கொள்பவர் அரம் அலரே என்பார்; மெய்க்கதி காண்பவர் காமர் சொல்வோரே என்பது பொருள் முடிபு. மலர் மெய்க்கதி–வினைத்தொகை. ஈற்றேகாரத்தைச் சொல்வோர் என்பதுடன் இயைக்க. தேற்றம். பிரிநிலை எனினும் ஆம்.

நீயும் புக்கொளிக் காமர் சொல்லி மெய்க்கதி காண்பாயாக என்பது குறிப்புப்பொருள்.

14. காண்பரி மேதமுத லாகச் சொல்லும கத்தினரெண்
காண்பரி மேத ரசமர மாதர் கலப்பன்றியென்
காண்பரி மேதரி புக்கொளி வாழ்கரு ணாம்பிகைநிற்
காண்பரி மேதகை நெஞ்சின ரேய்வர் கனசுகமே.

**காண் பரிமேதம் முதலாகச் சொல்லும் மகத்தினர்** - *அழகிய அசுவமேதம் முதலியவைகளாக (வேதத்தின் கருமகண்டத்தில்) சொல்லப்பட்ட வேள்விகளை இயற்றுபவர்கள்*

**எண் காண் பரி மேது அரசு அமர மாதர் கலப்பு அன்றி** – *(இத்துணைய என்று) அளவிட்டுக் குறிக்கப்படும் செல்வம், அறிவு, நில உலக அரசாட்சி, தெய்வலோக மங்கையர் தொடர்பு ஆகிய இவைகளைத் தவிர*

**என் காண்பர்** - *வேறு என்ன பயன்பெறுவர்*

**இ புக்கொளி வாழ் மே தரி கருணாம்பிகை** - *இந்த அவிநாசியில் எழுந்தருளியுள்ளவளும் அன்பு பூண்டவளும் ஆகிய கருணாம்பிகையே!*

**நிற்காண் மேதகை பரி நெஞ்சினர்** - *(தியானத்திலே) உன்னைத் தரிசிக்கின்ற பெருமை தங்கிய உள்ளத்தை உடைய அடியார்கள்*

**கன சுகம் ஏய்வர்** - *பேரின்பத்தை அடைவார்கள்*

குறிப்பு : எண் காண் என்பதனை முதல்நிலைத் தீபகமாகப் பரிமுதலிய நான்கனொடும் கூட்டுக. வேள்வி முதலியவைகளால் பெறப்படும் இன்பங்களுக்கு அளவும் காலக்கெடுவும் உண்டு என்றபடி. இறைவியின் அருள்பெற்றவர்களின் பேரின்பத்திற்கு இவை இல்லை என்பது அருத்தாபத்தியாற் பெறப்படும். ஏகாரம் ஈற்றசை. காண் என்னும் சொல் முதலடியில் எழிலையும், இரண்டாவதில் குறிக்கப்படுவதனையும், அடுத்ததில் பயனாகப் பெறுவதையும், ஈற்றடியில் தரிசித்தலையும் தனக்குப் பொருளாகப் பெற்றது.

15. **கனவான வம்புவி யிற்சுக மேதந்தக் கற்பகந்தோய்
கனவான வம்புணர்ந் தெய்த்தேங்கக் காதை கரையிலவேற்
கனவான வம்புப் பொழிற்புக் கொளிக்கரு ணாம்பிகைபொற்
கனவான வம்புயத் தாள்விட்டின் பேது கருதிடினே.**

**அந்த கற்பகம் தோய் கனவான்** - *அழகிய கற்பகச் சோலைக்கு உரியவனும் பெருமித முடையவனுமாகிய இந்திரனே*

**அவம் புணர்ந்து எய்த்து ஏங்கு அ காதை** - *துன்பங்களை அடைந்து வருந்திக் கலங்கியதைக் கூறுகின்ற வரலாறுகள்*

**கரை இலவேல்** – *கணக்கற்றுக் காணப்படுமாயின்*

**கருதிடின்** - *நன்றாக ஆலோசிக்குமிடத்து*

**கனவு ஆன அம்புவியில் சுகம் ஏது** – *சொப்பனத்தைப்போன்ற உலக வாழ்க்கையில் இன்பம் எங்கே உள்ளது?*

**கன வான வம்பு பொழில்** - *மேகங்களுக்கிடமாகிய ஆகாயத்தை அளாவியனவும் மணம் நிறைந்தனவுமான சோலைகள் நிறைந்த*

**புக்கொளிக் கருணாம்பிகை** - *அவிநாசிக் கருணாலயச்செல்வியின்*

**பொன் கன வான அம்புயத்தாள் விட்டு** - *அழகியனவும் மிக வாசனை வீசுகின்றனவும் ஆகிய தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளைத்தவிர*

**இன்பு ஏது** - *வேறு இன்பங்கள் எவை உள்ளன ? (ஒன்றுமே இல்லை என்றபடி)*

குறிப்பு : இச்செய்யுளின் சொற்களைப் பொருள்கோளுக்கு ஏற்றபெற்றி கொண்டுகூட்டிக் கொள்க. முதலடியில் ஆன உவமைப்பொருட்டு. கனவான் என்புழி உயர்வு சிறப்பும்மை தொக்கது. கருதிடின் அம்புவியிற் சுகம் ஏது? தாள் விட்டு இன்பு ஏது? எனப் பொருண்முடிபு காண்க. ஏதும் இல்லை என்பது குறிப்பு. ஏகாரம் ஈற்றசை.

16. கருதா ரரணமட் டார்மெத்த வாசங் கமழ்ந்திடும
கருதா ரரணமட் டார்மங் கலப்புக் கொளிக்கவின
கருதா ரரணமட் டார்குந் தளக்கரு ணாம்பிகைதாட்
கருதா ரரணமட் டார்மெய் விதிதன் கரப்படைப்பே.

**கருதார் அரணம் அட்டார்** - *பகைவர்களுடைய (மூன்று) கோட்டைகளை (எரித்து) அழித்தவரும்*

**மெத்த வாசம் கமழ்ந்திடும் அகரு தாரு அரணம் மட்டு ஆர்** - *மிகவும் நறுமணம் வீசுகின்ற அகில், தேவதாரு போன்ற மரங்கள் நிறைந்த காவற்காட்டைத் தன் எல்லையாகப் பெற்ற*

**மங்கல புக்கொளி கவின் நகர் உதாரர்** - *சுபகரமான அவிநாசியாம் அழகிய நகரத்தில் எழுந்தருளியுள்ள கருணைமிக்கவரும் ஆகிய சிவபெருமான்*

**அன்அ மட்டு ஆர் குந்தள கருணாம்பிகை தாள்** - *பொருந்துகின்ற வண்டுகள் தங்கும் கூந்தலையுடைய கருணாலயச்செல்வியின் திருவடிகளை*

**கருதார் அ ரணம் மட்டு ஆர் மெய்** - *எண்ணாதவர்களுடைய (ஊழ்வினையாகிய) அந்தத் துன்பத்தை மாத்திரம் அனுபவித்துக் கொண்டிருக்கும் உடல்கள் யாவும்*

**விதி தன் கர படைப்பே** - *பிரமன் தன் கைகளால் மறுபடியும் இயற்ற உள்ளனவேயாகும். (அவர்கள் மீண்டும் மீண்டும் பிறந்துழல்வர் என்றபடி)*

குறிப்பு : தேன் என்னும் பொருள்பெற்ற மட்டு என்ற சொல் ஆகுபெயராக வண்டினை உணர்த்திற்று. ரணம் மட்டு ஆர் மெய் என்றது உடலளவில் ஊழ்வினைப்பயனை நுகர்ந்துகொண்டு திரிதலேயன்றி உயிர்நலத்திற்காக முயலாதவர்கள் என்ற குறிப்பில். அவர்கள் பிறவியெடுக்கப்போவது சற்றும் ஐயமற்ற நிச்சயமாதலின் எதிர்காலத்தை நிகழ்கால வாய்பாட்டாற் கூறினார். "வாராக் காலத்து வினைச்சொற் கிளவி இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும் இயற்கையும் தெளிவும் கிளக்குங் காலை" என்பது தொல்காப்பியம். ஈற்றேகாரம் தேற்றம்.

17. கரங்கந் தரங்குழல் கண்குழன் மாற்றமங் கன்னியர் தங்
கரங்கந்த ரங்குழல் காந்தள்கம் பம்மெனுங் காமவந்த
கரங்தந் தரங்குழல் வார்கரு ணாம்பிகை காற்றுணை
கரங்கந் தரங்குழல் வாய்தீர் சுகக்கதிக் கண்ணியரே.

**கரம் கந்தரம் குழல்** - *விஷமும் மேகமும் புல்லாங்குழலும்*

**அம் கன்னியர்தம் கண் குழல் மாற்றம்** - *(முறையே) அழகிய மகளிரின் விழிகளுக்கும் கூந்தலுக்கும் மொழிகளுக்கும் நிகர் என்றும்*

**கரம் கந்தரம் குழல்** -*(அவர்களுடைய) கைகளும் கழுத்தும் அல்குலும்*

**காந்தள் கம்பு அம் எனும்** - *காந்தள் மலர்களையும் சங்கினையும் கடலையும் ஒக்கும் என்றும் கூறுகின்றவர்களாகிய*

**காம அந்தகர் அங்கம் தரங்கு உழல்வார்** - *காமத்தால் அறிவுக்கண் இழந்த குருடர்கள் உடல்களாகிய அலைகளில் சுழன்று திரிவர் (மறுபடியும் மறுபடியும் புதுப்புது உடலெடுப்பர் என்றபடி)*

**கருணாம்பிகை காற்றுணை நுகர் அங்கு** - *கருணாம்பிகையின் இணையடிகளால் ஏற்படும் இன்பத்தைத்துய்க்கின்ற அந்த நிலையில்*

**அந்தரம் குழு அல் வாய்தீர்** - *மோகத்தோடு கூடிய ஆணவஇருள் பேச்சற்றுக் கிடப்பதாகிய*

**சுககதி கண்ணியரே** - *பேரின்பமாகிய வீட்டையடையும் கனவான்கள் ஆவர்.*

குறிப்பு : அம் கன்னியர் தம் என்னும் சொற்றொடரை இடைநிலை விளக்காக கண் குழன் மாற்றம், கரம் கந்தரம் குழல் என்னும் இரண்டுடனும் இயைக்க. முதலிரு அடிகளிலும் நிரனிறை வந்தது. அரங்கம் அரங்கு எனப்படுவதைப்போலத் தரங்கம் [அலை] தரங்கு என வந்தது. அங்கத்தரங்கு எனற்பாலது யமகம் நோக்கி மெலிந்தது. காற்றுணை நுகர்தல் என்பது உபசாரமாக காற்றுணையால் பெறப்படும் இன்ப நுகர்ச்சியை உணர்த்திற்று. ஈற்றடியில் அந்தரம் குழுஅல் என்பதற்குத் தீமையோடு சேர்ந்த ஆணவம் எனினும் ஆம். வாய்தீர் என்றது செயலும் எண்ணமும் தீர்தற்கு உபலக்ஷணம். ஏகாரம் தேற்றம் காம அந்தகர் அங்கத்தரங்கில் உழல்வார். காற்றுணை நுகர் அங்கு கண்ணியரே என்பது பொருண் முடிபு.

18. ***கண்ணியக் கந்தர மால்போற்று மாதி கருத்தர் பிறைக்***
***கண்ணியக் கந்தர மால்விடத் தார்பெறக் காதல்வலக்***
***கண்ணியக் கந்தர மால்வடி வக்கரு ணாம்பிகை தாட்***
***கண்ணியக் கந்தர மால்போல நெஞ்சே கரையவென்பே.***

**கண்ணிய கந்தர் அ மால் போற்றும் ஆதி கருத்தர்** – *பெருமதிப்புடைய முருகப் பெருமானும் பிரமனும் திருமாலும் போற்றுகின்ற முதற் பரம்பொருளும்*

**பிறைக்கண்ணிய கந்தர மால் விடத்தார்** – *பிறைமதியாகிய மாலையை அணிந்தவரும் கழுத்தில் கொடிய நஞ்சினை உடையவரும் ஆகிய சிவபெருமான்*

**பெற காதல் இயக்கம் வலக்கண் தரு** – *பெறும்வண்ணம் இன்ப முயக்கத்தைத் தன் வலப்பக்கத்தே கொடுப்பவளாகிய*

**அ மால் வடிவ கருணாம்பிகை** – *அந்தக் கரிய நிறத்தையுடைய கருணாம்பிகையின்*

**தாட்கு** – *திருவடிகளில்*

**நெஞ்சே அக்கு மால் போல அம் தர** – *(என்) உள்ளமே! கண்கள் மேகங்களைப்போல் கண்ணீரைப் பொழியவும்*

**என்பு கரைய** – *(பக்திமிகுதியினால்) எலும்புகள் கரையவும்*

**அண் நி** – *நீ பொருந்துவாயாக.*

குறிப்பு : கந்தர் அ மால் மூவிடங்களிலும் எண்ணும்மைகள் தொக்கன. கந்தர மால் விடத்தார் என்றது மால்விடக் கந்தரத்தார் என்னும் பொருட்டு. சிவபெருமானின் இடப்பாகம் இறைவி. ஆகவே தேவி தன் வலப்பாகத்தை இறைவனுக்குக் கொடுத்ததாகக் கூறினார். தாட்கு வேற்றுமை மயக்கம். கண்ணியக் கந்தர மால் விடத்தார் என்புழி யமகம் நோக்கிக் ககரவொற்று விரிந்தது. நீ என்பது நி எனக் குறுகியது. ஈற்றேகாரம் அசை.

*19. கரையத்தி யங்கண்டர்க் காக்கயி லாயவங் கட்புகுமிக்*
*கரையத்தி யங்கண்ட னிற்றீய்ப்பர் தோய்கரு ணாம்பிகைமுற்*
*கரையத்தி யங்கண்ட தும்பநின் றேத்திடுங் காதலரிற்*
*கரையத்தி யங்கண்ட ருஞ்சுக மேய்வைமெய் காண்டிநெஞ்சே*

**கரு ஐயத்து இயங்கு அண்டர்க்கா** - *(அசுரர்களால் எத்தகைய தீமைகள் நேருமோ என்ற) கொடிய சந்தேகத்துடன் வாழ்ந்து கொண்டிருந்த தேவர்களின் பொருட்டாக*

**கயிலாய அங்கண் புகும் இக்கரை** - *திருக்கயிலையாகிய அவ்விடத்தில் புகுந்த கரும்புவில்லினை உடைய மன்மதனை*

**அ தி அம் கண்தனில் தீய்ப்பர்** - *(நெற்றியில் உள்ள தாகிய) அந்த நெருப்பாகிய அழகிய விழிகளால் எரித்தவராகிய சிவபிரானால்*

**தோய் கருணாம்பிகைமுன்** - *அணைக்கப்படும் தேவியின் திருமுன்னர்*

**கரை அத்து கண் ததும்ப நின்று** - *கண்ணீர் தன் வரம்பை மீறி வெளியே பொழியும்படி நின்றுகொண்டு*

**இயம் ஏத்திடும் காதலரில்**- *(அவளுடைய) புகழ்பாடித் துதிக்கின்ற மெய்யன்பர்களைப்போல*

**நெஞ்சே கரைய தியங்கு அண்டஅரும் சுகம் ஏய்வை** - *(என்) உள்ளமே ! நீயும் (தேவியைக்கருதி) உருகுவாயாகின் துன்பங்கள் சற்றும் நெருங்க முடியாத பேரின்பத்தை அடைவாய்*

**மெய் காண்டி** - *இதன் உண்மையை நீயே அனுபவித்துப்பார்*

குறிப்பு : அ நெஞ்சறிசுட்டு; தி என நின்றது குறுக்கல் விகாரம். அற்று எனற்பாலது உலகவழக்குப்போல அத்து என வந்தது மரூஉ. ஏய்வை என்னும் பயனிலைக்கு எழுவாயான நீ என்பதும் அத்துடன் இறந்தது தழுவிய எச்சவும்மையும் தொக்கன.

20. காண்டங் தரிக்குஞ் சடையார்தன் புக்கொளிக்கண்டளிதென்
காண்டங் தரிக்கு நிகரிட் டிடைக்கரு ணாம்பிகையைக்
காண்டங் தரிக்கு ளகுறையை யோதிற் கணத்திலெதிர்
காண்டங் தரிக்குங் கடம்பனி லின்பங் கலக்குநெஞ்சே

**நெஞ்சே** - *என் மனமே!*

**காண்டம் தரிக்கும் சடையார் தன் புக்கொளிக்கண் தளிதென்** - *(கங்கையாகிய) நீரைப்புனைந்த சடையையுடையவராகிய சிவபெருமானுக்குரிய திருவவிநாசியில் தென்புறத் திருக்கோயிலில்*

**காண் தந்து அரிக்கு நிகர் இட்டு இடை கருணாம்பிகையை** - *அழகிய நூலையும் சிங்கத்தின் இடுப்பையும் போன்ற மெலிந்த இடையினை உடைய தேவியை*

**காண்டு அந்தரிக்கு உள குறையை ஓதில்** - *(தரிசித்து) வணங்கி பரம்பொருள் ஆகிய கருணாலயச்செல்வியின்பால் உனக்குற்ற மனவருத்தங்களை எடுத்துக் கூறிப் பிரார்த்தித்தால்*

**கணத்தில் எதிர் காண்தந்து அரிக்கும்** - *ஒருநொடியில் உன் (மனக்கண் காணக் காட்சிதந்து (உன் குறைகளை) இல்லாமற் செய்துவிடுவாள்*

**கடம்பனில் இன்பம் கலக்கும்** - *(அதற்குப்பிறகு) முருகவேளைப் போலப் பேரின்பத்தில் திளைக்கலாகும்*

குறிப்பு : தளிதென் என்பது இலக்கணப்போலி. தென்புறமுள்ள தளி என்க; அரி என்றது அரியின் இடையை, முதலாகுபெயர். வணங்கு என்னும் பொருளமைந்த காண்டு என்ற வினையெச்சம் ஓதில் என்ற பிறிதோரெச்சத்துடன் இணைந்து அரிக்கும் என்னும் பிறவினை கொண்டு முடிந்தது. அந்தரி –தனக்கு ஆதாரமாகப் பிறிதொரு பொருள் இல்லாதவள்; பரம்பொருள். காண்டம் தரிக்கும் வேற்றுமைத்தொகை கடம்பனில் என்றதில் இல் உவம உருபு.

21\. *கலவர வத்தந் தழைசடைப் புக்கொளிக் கண்ணுதலார்*
*கலவர வத்தந் தயங்காழி தோய்கரு ணாம்பிகைப்பு*
*கலவர வத்தந்த மெய்தார்விண் வாணர் கனிதுதிபு*
*கலவர வத்தந்த மெய்தேர்ந் தொடுக்குவர் காயத்தையே*

**கல அரவத்து அம் தழை சடை புக்கொளிக் கண்ணுதலார் தோய்** – *கலகல என்றுஒலிக்கின்ற (கங்கை) நீர் விளங்குகின்ற சடையை உடையவரும் திருவவிநாசியில் எழுந்தருளியுள்ளவரும் நெற்றிக்கண்ணை உடையவருமாகிய சிவபிரான் அணைக்கும்*

**கல அரவு அத்தம் தயங்கு ஆழி கருணாம்பிகை** – *ஆபரணமாகப் பாம்பைக் கைகளில் ஒளிரும் மோதிரமாக அணிந்துள்ளவராகிய இறைவியை*

**புகலவர் அவத்து அந்தம் எய்தார்** – *அடைக்கலமாக அடைந்தவர்கள் பயனற்ற (சாவாகிய) முடிவை அடையமாட்டார்கள்*

**விண் வாணர் கனி துதி புகல** – *தேவலோகவாசிகள் கனிவாகப் புகழ*

**வர வத்து அந்த மெய் தேர்ந்து** – *மிகச்சிறந்த பொருளாகிய பரம்பொருளின் (ஞானிகளால் உணரப்பட்ட) அந்த (அநுபவ)உண்மையை உணர்ந்து*

**காயத்தை ஒடுக்குவர்** – *(தம்) உடலை அப்பொருளில் இரண்டறக் கலந்து விடுவார்கள்.*

குறிப்பு : முதலடியில் கலகல ஒலிக்குறிப்பு. கண்ணுதலார் தோய் கருணாம்பிகை, ஆழிக் கருணாம்பிகை என இயைக்க. கருணாம்பிகைப் புகலவர் என்றது இரண்டன் உருபும் பயனும் உடன்றொக்கதொகை. கனிதுதி–வினைத்தொகை. அந்தமெய் என்பதற்கு அழகான உண்மை நிலையை என்று கூறினுமாம். அப்போது, இன்பம் பயப்பதாதலின் அழகான என்று கூறப்பட்டது, அழகாகப் பாடுகிறான் என்பதைப் போல. ஏ ஈற்றசை.

22. காய மலக்கடந் தன்னைநம் பேலுட் கருத்தறுமோ
காய மலக்கடந் தத்ததென் றன்பர் கழறியுந்தீங்
காய மலக்கடந் தட்டுகி லேற்கரு ணாம்பிகையா
காய மலக்கடந் தப்புற மாம்பதக் கண்ணருளே.

**காய மல கடம் தன்னை நம்பேல்** - உடம்பாகிய மலபாண்டத்தை நிலையானது என்று நம்பியிராதே; அது

**உள் கருத்து அறு மோக** - (நடுநிலைநின்று) எண்ணும் எண்ணத்தை நீக்குவதாகிய ஆசையை உடையதும்

**ஆய மல கடு அந்தத்தது என்று** - (நன்றாக) ஆராய்ந்துபார்த்தால் வினைகளின் பயனாகிய கசப்புமிக்க முடிவினை உடையதும் ஆகும் என்பனவாக

**அன்பர் கழறியும்** - மெய்யடியார்கள் கூறியிருப்பவும்

**தீங்காய மலக்கு அடம் தட்டுகிலேன்** - தீமைபயப்பதும் அறிவைக் கலக்குகின்றதுமாகிய பிடிவாதத்தை (மறுத்து) நீக்காதவன் ஆகிய அடியேனுக்கு

**கருணாம்பிகை** - பெருங்கருணாலயச்செல்வியே!

**ஆகாயம் அல** - (கண்ணுக்குப் புலப்படுகின்ற) இந்த வானத்தை மட்டும் அல்லாமல்

**கடந்து அப்புறம் ஆம் பதக்கண் அருள்** - இதனையும் கடந்து தத்துவாதீதமாகிய (உன்) திருவடியாகிய இடத்தைக் கொடுத்தருள்வாயாக.

குறிப்பு : நம்பேல் என்பதற்கு விரும்பாதே எனினுமமையும்; "நம்பும் மேவும் நசையாகும்மே" என்றமையின். மோக+ஆய=மோகாய வடமொழித்தீர்க்கசந்திமுடிபு. மோகத்தது, அந்தத்தது என இருவழியும் கூட்டுக. தட்டுகிலேற்கு அருள் என இயைக்க. அண்மைவிளி இயல்பு ஆயிற்று. பதக்கண்– திருவடிகளாகிய இடம், பண்புத்தொகை. இனி, பதக்கண் என்ற தொடருக்கு, பதத்தைக் காண்கின்ற ஞானவிழி எனப் பொருளுரைத்து இரண்டன் உருபும்பயனும் உடன்றொக்கதொகை எனினும் அமையும். ஏகாரம் ஈற்றசை.

23. *கண்ணமை யத்திருக் காட்சிக் கொலைவர்க் கடக்கநுதற்*
*கண்ணமை யத்திருக் காட்சிய தாகக் கவின்றிடற்போற்*
*கண்ணமை யத்திருக் காட்சிக்கெட் டாக்கரு ணாம்பிகையென்*
*கண்ணமை யத்திருக் காட்சிதந் தோட்டுளக் கங்குலையே.*

**நம் கண் ஐய திருக்கு ஆள் சிக்கு நல் ஐவர்க் கடக்க** – *எம்மைப் பொருந்தியுள்ளதும் சந்தேகத்தில் ஆழ்த்துவதும் வஞ்சத்தை உடையதும் சங்கிலியாகப்பொருத்துவதும் ஆகிய ஐம்புலன்களின் சேட்டையை வெல்ல*

**நுதற்கண் அமை அ திருக் காட்சிஅது ஆகக் கவின்றிடல் போல்** – *நெற்றியினிடத்தே அமைந்துள்ள அத் தீவிழி சாட்சியாக விளங்குவதைப் போல*

**கன்ன மையத்து இருக்கு ஆட்சிக்கு எட்டா** – *பெருமைமிக்கதும் நடுநிலை பிறழாததுமாகிய வேதத்தின் அநுபவத்திற்கும் கிடைக்காதவளாகிய*

**கருணாம்பிகை** – *பெருங்கருணாலயச் செல்வியே!*

**என் கண் அமைய திரு காட்சி தந்து** – *அடியேனின் விழிகள் நிறையும்படி உன் தெய்வீக தரிசனத்தைக் கொடுத்தருளி*

**உள கங்குலை ஓட்டு ஏ** –*(அடியேனின்) மனத்தில் நிறைந்துள்ளதாகிய அஞ்ஞான இருட்டை நீக்குவீராக.*

குறிப்பு : சிக்கு–கண்ணி எனப் பொருள்படும் இச்சொல் ஆகுபெயராகச் சங்கிலியை உணர்த்திற்று. நம் என்ற சொல் உளப்பாட்டுத் தன்மைப் பன்மையை உணர்த்தாமல் எம் என்ற அளவிலே நின்றது. ஐவர்–தொகைக் குறிப்புப்பெயர். நுதற்கண் என்புழிக் கண் ஏழன்உருபு. திருக்–வடமொழி. தற்சமம். தமிழில் திருக்கு எனத் திரியும். இரண்டாமடியில் காட்சி என்ற சொல் சாட்சி என்ற பொருளில் ஆளப்பட்டது. "ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற் றயலார் தங்கள் காட்சியில் மூன்றி லொன்று காட்டுவா யென்ன" என்பதைப்போல கருணாம்பிகை–அண்மைவிளி. காட்சிஅது–பகுதிப்பொருள்விகுதி. ஈற்றுஏகாரம் அசை. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புல இன்பத்தின் விளைநிலம் ஆகிய ஒண்டொடியாருடன் கூட்டும் காமனை எரித்த பெற்றியால் சிவபிரானின் தீவிழி ஐவர்க்கடக்க சாட்சியாயிற்று. தீவிழி ஐம்புலன்களை வெல்வதற்கு சாட்சியாக அமைந்துள்ளதுபோல இறைவியின் திவ்யதரிசனம் அஞ்ஞான நீக்கத்திற்குச் சாட்சி என்க. அவள் ஞானசக்தியாதலின்.

24. **கங்கண மாசுணங் கற்கிடுங் கான்சுடு காட்டிடுமங்
கங்கண மாசுண மாகுநெஞ் சீது கருதலைநீ
கங்கண மாசுணத் தார்புக் கொளிக்கரு ணாம்பிகைதுங்
கங்கண மாசுணங் கப்பெற் றியனுமே காரமன்றே.**

**கங்கு அண மா சுணங்கு அற்கிடுங்கால்** - *தீப்பொறிகள் பொருந்தும் வண்ணம் மரணமாகிய மெலிவு (மாற்றமுடியாமல்) நிலைபெற்றபோது*

**சுடுகாட்டு இடும் அங்கம் கணம் ஆ சுணம் ஆகும்** - *மயானத்திலே வைப்பதாகிய உடல் ஐயகோ! கணத்தில் சாம்பலாகிவிடும்;*

**நெஞ்சு! நீ ஈது கருதிலை** - *(என்) மனமே! நீ இதனைப்பற்றி எண்ணிப் பார்க்கின்றாயில்லை;*

**கங்கண மாசுணத்தார் புக்கொளி** - *கைவளையல்களாகப் பாம்புகளை அணிந்திருப்பவராகிய சிவபெருமானுக்குரிய அவிநாசியில் கோயில் கொண்டுவிளங்கும்*

**கருணாம்பிகை துங்கம் கண** - *கருணாலயச்செல்வியின் புனிதத்தை (தெய்வீகத் திருவருளை) தியானித்தால்*

**மா சுணங்கப்பெற்றியனும்** - *மிக இழிந்த நாயின் இயல்பினனேனும்*

**ஏகாரம் அன்றே** - *பொன்போற் சிறந்து விளங்குவான் அன்றோ?*

குறிப்பு : சுணம்–சுண்ணம் என்பதன் இடைக்குறை. நெஞ்சு–அண்மை விளி இயல்பாயிற்று. கங்கண மாசுணத்தார் என்றதனை மாசுணக் கங்கணத்தார் என மாறுக. அன்றே வினாப் பொருட்டு; ஆவர் என்பது கருத்து. கண–கண்ண என்பதன் இடைக்குறை, கருதுதல் என்பது இதன் பொருள். மிகவிரைவில் அழிகின்ற உடலபிமானத்தை அறவே யொழித்து இறைவியைத் தியானிப்பவர்கள் எவ்வளவு இழிதகையினரேனும் பொன்போற் போற்றப்பெறுவர் என்பது இக்கவியின் திரண்ட கருத்தாகும்.

25. காரண காரிய மேசுக மென்னக் கருதுநெஞ்சே
காரண காரியல் வாகனன் போற்றிடுங் கண்ணியமார்
காரண காரிய மீதாகு மன்பிற் கருதெதெனிற்
காரண காரிய மாங்கரு ணாம்பிகை காற்பணியே.

**கா ரண கார் இயமே** - *சுவர்க்கத்தை வேண்டிச் செய்யப்படுவதாகிய கொலையைப் பற்றிக்கூறும் அழகிய வார்த்தைகளே (வேள்விக் கொலையை ஒப்பும் வேதபாகங்களே)*

**சுகம் என்ன கருது நெஞ்சே** - *இன்பத்திற்குக் காரணமானது என எண்ணும் என் மனமே!*

**கார் அண் அ கார் இயல் வாகனன்** - *கருமை பொருந்தியதாகிய அந்த மேகங்களாகிய இயங்குகின்ற ஊர்தியை உடையவனாகிய இந்திரனே*

**போற்றிடும் கண்ணியம் ஆர் காரண காரியம் ஈது ஆகும்** - *பேணிச் செய்யும் பெருமைபொருந்தியதும் தலைமையான தொழிலும் இதுவே ஆகும்.*

**எது எனில்** - *(அத்தகைய முதன்மைத் தொழில்) எதுவோ என வினவுவையாயின்*

**காரணம் காரியம் ஆம்** - *(நம்செயலின்) கருவியாகவும் பயனாகவும் உள்ள*

**கருணாம்பிகை கால்பணியே** - *கருணாலயச்செல்வியின் திருவடிகளுக்குச் செய்கின்ற திருத்தொண்டே ஆகும்*

**அன்பில் கருது** - *இதனைப் பக்தியுடன் சிந்தித்துப் பார்ப்பாயாக*

குறிப்பு : நெஞ்சே! ஈதுஆகும்; எது எனில் பணியே; கருது என்பது பொருண்முடிபு. கருது நெஞ்சே-வினைத்தொகை. கா ஆகுபெயராகச் சுவர்க்கத்தினை உணர்த்திற்று. ரணம்-வேள்வியிற்செய்யப்படும் கொலையைக் குறிப்பால் உணர்த்தியது. கொலையையொப்பும் பகுதிகளை அழகிய சொற்கள் என்றது இகழ்ச்சிக்குறிப்பு. சுகத்திற்குக் காரணம் ஆக உள்ள இயத்தைச் சுகம் என்றே கூறியது உபசார வழக்கு. மனமே! சுவர்க்கத்தின் வாழ்வை விரும்பி நீ அல்லலுறுகிறாய்; ஆனால் அந்நாட்டிறைவனாகிய இந்திரனே இறைவியைப் போற்றிப் பணிகிறான்; இதனை எண்ணிப் பார் என உபதேசிக்கிறார். வாகனன் என்புழி உயர்வுசிறப்பும்மை தொக்கது. காரணம்-மூன்றாமடியில் தலைமையான, ஈற்றடியில் பயன். பரம்பொருளைப்பணிவதே கருவியும் பயனுமாம் என்பது ஆன்றோர் முடிவு. ஏகாரம் - தேற்றம்.

*26. காலம் பரம்புரை கண்மாதர் வாஞ்சை கதித்தநெஞ்சே*
*காலம் பரம்புகண் ணெய்தநிற் கொண்டுசெல் காலத்தின்மின்*
*காலம் பரம்புனை யுங்கரு ணாம்பிகை கஞ்சமலர்க்*
*காலம் பரம்புக லல்லாதி யார்புவிக் கட்டுணையே.*

**கால் அம்பு அரம் புரை கண் மாதர் வாஞ்சை கதித்த நெஞ்சே** - *(கருமையால்) இருளையும்(கூர்மையால்)பாணத்தையும் அரத்தையும் ஒக்கும் விழிகளை உடைய மகளிரின்பால் ஆசையை மிகுதியாகப் பெற்றுள்ள நெஞ்சமே!*

**பரம்பு கண் எய்த காலம் நிற்கொண்டு செல் காலத்தில்** - *படுக்கையின் இடத்தே பொருத்திக் கூற்றுவன் உன்னைத் தன்னோடு இட்டுப்போகும் பொழுது*

**மின்கால் அம்பரம் புனையும் கருணாம்பிகை** - *மின்னலைப்போல் ஒளி வீசுகின்ற பொன்னாடையை அணிந்துள்ள கருணாலயச் செல்வியின்*

**கஞ்ச மலர்க்கால் அம் பரம் புகல் அல்லாது** - *தாமரைமலர் போன்ற திருவடிகளாகிய அழகியதும் மிக உயர்ந்ததுமாகிய புகலிடமன்றி*

**புவிக்கண் யாரே துணை** - *இவ்வுலகில் வேறுயார் துணையாவர்? (ஒருவருமில்லை என்றபடி)*

குறிப்பு : பரப்பு யமகம் நோக்கிப் பரம்பு என மெலிந்தது "காலம் உலகம் உயிரே உடம்பே, பால்வரை தெய்வம் வினையே பூதம் ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம், ஆயீரைந்தொடு பிறவும் அன்ன, ஆவயின் வரூஉங் கிளவியெல்லாம், பால்பிரிந்திசையா உயர்திணை மேன" என்ற விதிப்படி [தொல். சொல். 57] காலம் என அஃறிணையாய் நின்று காலக்கடவுளை உணர்த்திற்று. அல்லாது + யார். "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்; யவ்வரின் இய்யாம் முற்றுமற் றொரோவழி" என்றபடி [நன்164] அல்லாதியார் ஆயிற்று. ஈற்றேகாரத்தை யார் என்பதனோடு கூட்டுக. வினா. கண் ஆகிய ஒரு பொருளுக்கு மூன்று உவமைகள் கூறியது பலபொருள் உவமையணி.

*27. கட்டுண்டங் காட்டி மயக்குமின் னாரொடுங் காதலின்மேற்*
*கட்டுண்டங் காட்டி லுளங்களிப் பீர்கரு ணாம்பிகையின்*
*கட்டுண்டங் காட்டி லடிபோற்று மன்பர் கணத்தினிலே*
*கட்டுண்டங் காட்டி லமைந்திடு மோமெய்ச்சு கம்வரவே.*

**கண் துண்டம் காட்டி மயக்கும் மின்னாரொடும்** - *தம் விழிகளின் மூக்கின் அழகினைக் காண்பித்து அறிவினைக் கலக்கும் மகளிரோடு*
**காதலின்மேற் கட்டுண்டு அங்கு ஆட்டில் உளம் களிப்பீர்** - *ஆசையினால் பிணிப்புண்டு அந்நிலையில் சிற்றின்பத்தில் மனமகிழும் உலகோரே!*
**கருணாம்பிகையின்** - *அவிநாசிக் கருணாகரவல்லியினுடைய*
**கட்டு உண்தம் காட்டு இல் அடி** - *(உயிர்களுக்கு) அரணாக அமைந்ததும் (அடியார்களால்) துய்க்கப்படுவதும் புண்ணியமயமானதும் உவமை கூற வேறு எடுத்துக்காட்டு இல்லாதபடி இணையற்றனவுமாகிய திருவடிகளை*
**போற்றும் அன்பர் கணத்தினிலே** - *பரவும்மெய்யடியார் திருக்கூட்டத்தில்*
**துண் கண் தங்கு ஆட்டில்** - *விரைவாகப்பொருந்தி (அக்குழுவிலேயே) நிலைத்திருப்பதாகிய வல்லமையோடு*
**மெய்ச்சுகம் வர அமைந்திடும். மோ** - *நிலையான பேரின்பத்தைப்பெற (அந்நிலையிலேயே) இருப்பீராக!*

குறிப்பு : முதலடியிலும் ஈற்றடியிலும் கண்டுண் எனற்பாலது எதுகை நேக்கி வலிந்தது. மூக்கும்விழியுமாய் என்னும் உலகவழக்கு நோக்கிக் கண்துண்டம் காட்டி என்றார். பாடுதல் பாட்டு ஆனாற்போல் ஆடுதல் ஆட்டு ஆயிற்று. சிற்றின்பக்கேளிக்கைகளை இடக்கரடக்கலாக ஆட்டு என்பது இவர் இயல்பு. ''தம் தனம் காட்டி மயக்கிடுவார்க்குக் கை தாங்கு தனம் தந்து அனங்கு ஆட்டில் உழல்வீர்'' என்றார் பிறிதோரிடத்தும். அடி என்பதனைக் கட்டு உண் தம் காட்டுஇல் என்னும் நான்குடனும் தனித்தனி இயைக்க. உண்–''தொண்டர் கண்டு அண்டிமொண்டு உண்டிடும்'' என்பார் அருணகிரிநாதரும். துண்–விரைவைக் காட்டும் இடைச்சொல். காமுகர் மெய்யடியார் கூட்டத்தில் நிலைத்திருத்தல் அரிதாதலின் வல்லமை கருதி ''தங்கு ஆட்டில்'' என்றார். மோ–முன்னிலை அசை; ''சென்மோபாண'' என்புழிப் போல. ஈற்றேகாரம் அசை.

28. கம்பர வம்பணி கற்புலத் தாலுட் கலங்கிடுவேற்
கம்பர வம்பணி புக்கொளி நாயகற் காதல்செய்யுங்
கம்பர வம்பணி வாய்ந்த பெருங்கரு ணாம்பிகைதாட்
கம்பர வம்பணித் தொண்டனென் றாளலக் கண்டவிர்த்தே.

**கம்பர வம்பு அண் இகல் புலத்தால்** - *(மிகவும்) சஞ்சலமானதும் தீயவைகளின் தொடர்பு பெற்றதும் பகையானதுமான ஐம்புலன்களால்*

**உள் கலங்கிடுவேன்** - *மனக்கலக்கம் அடைகின்ற அடியேனை*

**கம் பரவு அம்பு அணி புக்கொளிநாயகர்** - *(தன்) தலையில் பரவுகின்ற இயல்பினை உடைய(கங்கை) நீரை அணிந்தவரும் திருப்புக்கொளியூர் இறைவருமாகிய அவினாசியப்பரை*

**காதல் செய்யும்** - *நேசிப்பவரும்*

**கம்பு அரவம் பணி வாய்ந்த பெருங்கருணாம்பிகை** - *சங்கினையும் பாம்புகளையும் நகைகளாக வாய்க்கப்பெற்றவரும் ஆகிய இறைவியே*

**தாள் கம் பரவு அம் பணி தொண்டன் என்று** - *(நின்) திருவடிகளாகிய முக்தியைப் போற்றுகின்றதாகிய (தெய்வீக) அழகு வாய்ந்த திருத்தொண்டினைச் செய்யும் பணியாள் என்னும்படி*

**அலக்கண் தவிர்த்தே ஆள்** - *(என்) துன்பங்கள் யாவற்றையும் நீக்கி ஆட்கொண்டருள்வீராக!*

குறிப்பு : கம்பர புலம், வம்பு அண் புலம், இகல் புலம் என இயைக்க. அதே போலக் காதல் செய்யுங் கருணாம்பிகை, பணிவாய்ந்த கருணாம்பிகை என இயையும். ஈற்றேகாரம் அசை, "திருவடியே சிவமாவது தேறில் திருவடியே சிவலோகஞ் சிந்திக்கில் திருவடியேசெல் கதியது" [திருமந்திரம் 138] ஆதலின் தாளாகிய முக்தி என்றார் "புண்டரீகத்தினும் செக்கச்சிவந்த கழல்வீடு [கந். அலங். 31] "நாததத்துவத் தப்புற நண்ணுநின் பாதபங்கயமே பரம்" [பழனித்திருவாயிரம் – பதிற்றுப். 20] என்பனவும் இக்கருத்தனவே.

29\. **கண்டங் கருத்தமை யன்னவர் கண்ணுவர் காணமறைக்**
**கண்டங் கருத்தமை யந்தீரச் சாற்றினர் காதுறச்சொற்**
**கண்டங் கருத்தமை யங்கரு ணாம்பிகை காற்றுணைய**
**கண்டங் கருத்தமை யன்பர்க்கு முத்திகைக் கட்கனியே**

**கண்டம் கருத்த மை அன்னவர்** - *கருமைமிக்க மையினைப் போன்று விளங்கும் கழுத்தினை உடையவரும்*

**கண்ணுவர் கான மறைக்கண் தங்கு அருத்தம்** - *(சிவபெருமானைக் குருநாதராகக்) குறித்துப்பணிந்த சனகாதி நால்வரும் தம் கண்களால் கண்டு உணரும் வண்ணம் வேதத்தின் உட்பொருளை*

**ஐயம் தீரச் சாற்றினர்** - *சந்தேகம் நீங்கும்படி(சின்முத்திரையால்) உபதேசித்தருளியவரும் ஆகிய அவிநாசியப்பரின்*

**காது உற சொல் கண்டு அங்கு அருத்து அமை** - *திருச்செவிகள் நுகரும் படி தன் இனிய வார்த்தைகளாகிய கற்கண்டை ஊட்டுகின்ற தாயாகிய*

**அம் கருணாம்பிகை கால் துணை** - *அழகிய இறைவியின் திருவடியிணைகளை*

**அகண்டம் கருத்து அமை அன்பர்க்கு** - *இடைவிடாமல் தம் சித்தத்திலே கொண்டிருக்கும் மெய்யடியார்களுக்கு*

**முத்தி கைக்கண் கனியே** - *வீட்டின்பம் உள்ளங்கை நெல்லிக்கனியேயாம் (மிக எளிதிற் கிட்டும் என்றபடி).*

குறிப்பு : கண்ணுவர்-வினையாலணையும் பெயர். ''விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும், பிறழவும் பெறூஉம் முக்காலமும் ஏற்புழி'' [நன் 384] எனும் வழுவமைதி பற்றி எதிர்காலமாக மயங்கிற்று. ''வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய் எல்லாமா யல்லதுமா யிருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச் சொல்லாமற்'' சொன்னபடியால் கண்ணுவர் காணச் சாற்றினர் என்றார். மூன்றாமடியில் அமை என்றது அம்மையின் இடைக்குறை. கவியில் பொதுவாகக் கைக் கட்கனியே என இருந்த போதிலும் உலகவழக்குப்பற்றி உள்ளங்கை நெல்லிக்கனி எனப் பொருள் உரைக்கப்பட்டது. ஏகாரம் தேற்றம்

30. கட்கந்த வம்புறழ் கண்ணுடை யார்தங் கருப்பவலைக்
கட்கந்த வம்புடைக் கும்புக் கொளிக்கரு ணாம்பிகைதன்
கட்கந்த வம்புய மானும் பரிபுரக் காமரடி
கட்கந்த வம்பு மலர்தூவி யேத்தவி காரவன்பே

**கட்கம் தவு அம்பு உறழ் கண் உடையார்தம்** - *வாளையும் பாய்ந்து செல்கின்ற கணையையும் போன்ற அழகிய விழிகளை உடைய மகளிரின்*

**கருப்பவலைக்கண் கந்து அவம் புடைக்கும்** - *கருஆகிய வலையில் கட்டுப்படுகிற தீமையை ஒழிக்கின்றவராகிய*

**புக்கொளிக் கருணாம்பிகைதன்** - *திருப்புக்கொளியூர் அவிநாசியில் எழுந்தருளியுள்ள இறைவியினுடைய*

**கள் கந்த அம்புயம் மானும் பரிபுரக் காமர் அடிகட்கு** - *தேன் நிறைந்ததும் நறுமணம் மிக்கதுமாகிய தாமரைமலர்களைப் போன்றனவும் சிலம்புகளை அணிந்துள்ளனவும் ஆகிய அழகிய திருப்பாதங்களில்*

**அந்த வம்பு மலர்தூவி ஏத்து** - *அழகியனவும் மணம் மிக்கனவும் ஆகிய பூக்களை அணிவித்துப் போற்றுவாயாக*

**அவிகார அன்பே** - *இத்தான் மாறுபாடற்ற தூய பக்தி ஆகும்*

குறிப்பு :- நெஞ்சமே என்னும் விளியை அவாய்நிலையாற் கொள்க. அவிநாசியப்பரியல் எனத்தொடங்கும் இந்த யமக அந்தாதி அவிகார அன்பே என ஈற்றயலடியில் அந்தாதித்தொடை பெற்று மண்டலித்து நிறைவேறுகிறது.

## 7. கருணாம்பிகைத் திருப்புகழ்ப்பஞ்சகம்

1. தத்ததன தனதான தனதானா

மட்டுலவு மலர்மாலை உற்றகுழ லொடுதாவு
மைக்கண்இல கிடமேவும் மடமானார்
மற்றெவர்க ளையுமேநின் ஒப்பில்வடி வெனவேஉண்-
மைப்படஎன் மனதூடு கருதேனோ?
அட்டுயிரை நிணம்மேதை கொட்டும்அக டுறுபாவர்
அற்றவர்கள் குலமோடு தொலையாரோ?
அப்பருடன் ஒருநீஎன் மைக்குலவு மனம்மேவி
அர்ச்சனைகொ டருள்ஈய நினையாயோ?
எட்டியல்கை யினன்ஆகு லப்பரவை யிடைமூழ்க
எற்றுகரம் உறும் ஆறு முகவோன் நீள்
எற்குலவு கரமீத யிற்படைய தெனமேவி
இற்றொழிய அசுராவி அடுதாயே!
அட்டதிசை யினும்வீசி சைக்கிரண மிகுஞான
அர்க்கன்என எனைஆள்ஓர் குருஆவாய்!
அற்றம் இல்பல் வளம்நீடு புக்கொளியில் அவிநாசி-
யப்பர்இடம் உறமேவு பெரியாளே!

2. தனதனனா தத்த தானன தனதானா

அதிர்கடல் சூ ழுற்ற பாரிடை
பலபலகோ டிக்கு மேல்எனும்
அனையர்கள்பால் மெத்த ஆர்வமொ டிருளேதோய்
அணிமுலையூ டுற்ற பாலினை
நுகர்தரலான் மொய்த்த தீவினை
அநுசிததோ டக்கு ழாம்முழு தறுமாறே
முதிர் அருள்மே னிப்பு ராரிதன்
உரமிசைதோய் வுற்ற தானநின்
முருகவிர்ஞா னக்கு யாசல இணைஆர்பால்
முருகனைநேர் பொற்பு மாதவர்
நுகர்தருமா றற்பி னோடருள்
முறைமையில் ஏ ழைக்கும் ஓர்சிறி தருள்வாயே

மதிபுனைவார் உட்கு லாவிய
புலவியைமா றச்செய் வான்அணி
மலரடிதாழ் பத்தர் ஆசைகள் முழுதீவாய்!
மலிஇருள் நா ளிற்ப ராவியல்
அடியவன்வா ழக்க லாமதி
வரஅருள்ஞா னச்சொ ரூபம்எய் தியதாயே!
திதிபுரிவான் மக்க ளோடெமன்
இவர்தொழில்மா றக்கண் நாடிடு
திருவருள்நீ டுற்ற ஆரியன் உருஆவாய்!
செழுமதிதோய் ஒப்பில் கோபுரம்
அரன் உருவே பெற்று நீடிய
திருஅவிநா சிக்கண் மேவிய பெரியாளே!

3. தனத்தத்தன தான தானன தனதானா

மதித்தற்கரி தாக மாயைசெய்
துயர்க்குப்பைகள் யாவும் யான் இவண்
வகுத்துச்சொல வேணு மோ? என துளம்ஆம்ஓர்
வனப்புற்றவிர் கோவி லூடொரு
கணத்தப்புறம் ஓவி டாதநின்
மனத்துக்கறி யாத ஓர் செயல் உளதேயோ?
சுதர்க்குத்தெரி யாம லேபொருள்
ஒளித்துத்தரு தாயர் மேவிய
துறைக்கொத்திட ஆடு னாதருள் தெரிவேன்;நீள்
துயர்க்கப்பலை நேர்பொய் மாய இ
உடற்பட்டது போது மால்உன்ஓர்
சுகப்பொற்கழல் வீடு கூடிட அருள்வாயே
சதிப்புத்திகொள் தீய பாவியர்
மனத்திற்றிமிர் ஆர்அ மாவிசி
தனைச் சித்தமெ ணாது பூரணை எனலாலே
சலக்கொற்றவன் ஆணை யால்உயிர்
துறக்கப்புகு வான்முன் ஆய்மதி
தழைக்கப்புரி நீடு பேர்அருள் உடையாளே!

திதிப்பட்டுயிர் போய்மி னார்கரம்
அகப்பட்டுழல் வேன்மெய் தேரஓர்
சிறப்புற்றமெ ஞான தேசிக வடிவாவாய்!
சிரித்துப்புரம் நீற நாடினர்
வலத்திற்கனி வோடு சீர்திகழ்
திருப்புக்கொளி யூரின் மேவிய பெரியாளே!

!. தத்தன தானன தான தானன தனதான

பற்பல கோடிய ஆன ஆருயிர்-
கட்கிடம் ஆகிய ஊனை ஏதம்ஓர்
பட்சண மாநுகர் ஈம நேர்அக டுறுதீயோர்
பட்டுடை மாடைகல் மேவு பூண்இனம்
இட்டலை ஆர்முகில் தோயு மாறுயர்
பத்திகு லாம்மணி மாட மீதுள மகிழ்வோடே
வெற்பன ஆணவ ராக நாடொறும்
நிற்பணி வார் அவர் ஏச லான்உளம்
வெட்குபு வாடிடு நீர்மை நீதியின் முறைதானே?
விற்பனம் நீள்பர ஞான பூரண
சித்தநு பூதிகு லாவும் ஓர்அருள்
வித்தகன் நாள் இதின் மேவு மாறருள் புரிவாயே
சிற்பர்க ளால்எழு தாத பேர்உரு
அற்புதம் ஆர்குயி லே! என் ஆதர
சித்தம்உ லாம்மயி லே! எ னா அரன் நுவல்பாவாய்!
சிற்றிடை யார்புடை சூழ வேபசு-
மைக்கிளி வாகன மீது லாம்இர-
திக்கொரு நாயகன் வாகை மேவவில் கணைஈவாய்!
பொற்பண மேபொரு ளாக நாடி,அ
வத்தலை வேன்எனை மேன்மை தோய்தவர்
புக்கஓர் சூழலின் மேவு மாறருள் குருஆவாய்!
பொய்ப்புவி மால்அறு சீல மாதவர்
அற்புட னேவழி பாடு காணிய
புக்கொளி யூர்அவி நாசி மேவிய பெரியாளே!

5. தனந்தன தாந்தனத் தனதானன தனதானா

இருந்திரை மேய்ந்துவிட் புலமாடதிர்
கரும்புயல் போன்றளிக் குலம் ஓவற
இசைந்திடு பூந்தொடைக் கவின்நீடிய குழலோடே
இமம்பொழி சாந்தன்ஒத் திடுவாள்முகம்
இலங்கெழில் ஈர்ஞ்செவிக் குழைதாவுகண்
இளங்கதிர் கான்றஅற் புதம் மேவுபு னகைவாய்நீள்
கரும்பலர் பூங்கணைத் திரள்ஆதிய
புனைந்தவிர் நான்குகைத் தலம்ஆர்ஒலி
கலந்தமை காந்திமிக் குறுமேகலை யொடுமேலோர்
கணங்களை மாந்துபொற் புறுநூபுரம்
வயங்கெழில் மாண்பதத் துணை ஆதிய
கவின்றெனுள் வாழ்ந்தருட் கதிஈயஉள் நினைவாயே
பொருந்திறல் ஈர்ங்கரக் கரிஈர்உரி
அணிந்திடு தாண்டவப் பெருமான் மயல்
புணர்ந்திடு வேன்கொள்அற் புதம் ஆர்உரு உடையாளே!
பொலங்கிரி வேந்தனுக் கியல்ஏழ்கடல்
குடைந்திடு பாண்டியற் கொழியா இசை
பொருந்திட வாய்ந்தபுத் திரியாவரும் மறைஈறாய்!
பிருந்தைகொள் வான்புயத் துறுவாள்மரு-
கியுந்தினம் வாஞ்சையிற் புனைபேர்எழில்
பிறங்கிய காங்கைஒத் தவிர்மேனிகொள் மலைமானே!
பிறந்திடல் மாய்ந்திடற் குளமேல் வெருள்
அமைந்தவர் வேண்டுபுக் கொளியூரிடை
பெருங்கரு ணாம்பிகைப் பெயர்மேய் அமர் பெரியாளே!

வாகீசர் மடம் என வழங்கும்

## 8. திருநாவுக்கரசர் மடாலய விநாயகர் பதிகம்

**(காப்பு வெண்பா)**

*மிக்கு ஒளி ஊர் செம்பவள வெற்பு என்று அவிநாசிப்*
*புக்கொளியூர்ப் பேர்ப்புண் ணியத்தலத்து அன்-புக்குஒளியா*
*நாவுக் கரசுமடம் நண்ணும்விக்கி னேச்சுரன்தன்*
*பாவுக்கு அருள்வான் பயன்.*

**நூல்**

[எண்சீர் விருத்தம்]

*திருவருள்மா மதஅருவி பொழிந்துஅடியார் துன்பம்*
*சிந்துஉரம்மிக்கு அமையும் அணிச் சிந்துரமா முகமும்,*
*பொருவு அருபா சாங்குசம் ஆதியகொள்கரங் களும்நாற்*
*புயங்களும் மிக்கு அவிர்தரும்முப் புரிநூல் ஆர் மார்பும்,*
*மருவனசக் கழல்களும்ஓர் மாத்திரைப்போது அடியேன்*
*மனம் அகலாது ஓங்கும்இன்ப வாழ்வுஅமையப் புரிவாய்*
*அருள்நலம்சால் புக்கொளியூர் அவிநாசி நாவுக்-*
*கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசே!* 1

*புன்புலவே டுவர்உவக்கும் போகம்மிகத் தேடிப்*
*பொய்சுமந்து மனம் அயர்ந்து புனல்உறும்வண்டேபோல்*
*துன்புஉலவா அவத்தைதொறும் புக்குஉழன்றது அல்லால்*
*சுகமயம்ஆம் நின்திருத்தாள் துணை அகம்கொண்டு ஏத்தி*
*என்புஉருகேன் உய்வதனுக்கு என்புரியக் கடவேன்?*
*எந்தை! அடி யேன்பிழை உள் எண்ணாதே வலிந்துஉன்*
*அன்புஉதவாய்; புக்கொளியூர் அவிநாசி நாவுக்*
*கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசே!* 2

*என்னையும் என் தன்மையையும் நினைதொறும்மெய் அருள்ச்சீர்*
*எய்துவது உண் டோஎனமிக்கு ஏங்குகின்றேன்; இணைஇல்*
*உன்னை, உன்றன் திருவுளத்தில் ஓங்கியபேர் அருளை*
*உன்னுகின்ற போதுஇன்பம் உள்ளமிசை அமைந்தே,*
*என்னைநமக்கு ஓர்குறை?நம் அப்பன்உளான்; என்றே*
*இறுமாக்கின் றேன்என்உளத்து இச்சைமுற்றுஈந் தருள்வாய்*
*அன்னைஎனப் புக்கொளியூர் அவிநாசி நாவுக்*
*கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசே!* 3

இருள்விரவா இதமனையின் கதவுஅடைத்துத் தாட்கோல்
இடுநர் எனக் காமாதி இகல் ஒழி[யக் கருதா]
மருள் விரவா உயிர்பொருள் சார்பு ஆதியற்று இச்சை
வைத்துஉழன்றேன் அல்லதுஉன்பொன் வாரிசத்தாள்
துணையைத்
தெருள்விரவச் சிந்தை செயேன்; என்னை உவந்து அருளால்
தேற்றிடல்நின் பரமே; ஓர் திக்குமற்றுஇங்கு அறியேன்;
அருள்விரவு புக்கொளியூர் அவிநாசி நாவுக்-
கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசே! 4

நவை உறும் என் இச்சை,செயல் அறிவதனைச் சற்றே
நாடில், எனக் கேஒழியா நகைவிளைக்கும் என்னில்
சுவைபெறும் அன் படியர்உளக் கோயிலில் வாழ்ந்து அருள்நின்
தூயதிரு உளத்தினுக்குளத் தோற்றம் அமைந் துறுமோ?
குவைபெறுபேர் அருள்க்கடலே! ஞானஇயல்க் குன்றே!
கோது இல் முக்கண் கரும்பிடைஅங் குரித்த இன்ப ரசமே!
அவைபொலி சீர்ப் புக்கொளியூர் அவிநாசி நாவுக்-
கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசே! 5

மூவர்களும் தேவர்களும் யாவர்களும் போற்றும்
முழுமுதலே! நின்திருத்தாள் முளரியில்நெஞ்சு அமைத்து,
பாஅனந்தம் முகில்எனவே பொழிந்துஉளம்நெக் குருகிப்
பரவசம்கொண்டு ஆடுபெரும் பத்தி அல்லால் மற்றோர்
ஆவல்அறி யேன்எனைஇங்கு அடர்த்திடும் ஊழ் வலிமுற்று
அறுத்தருள்வாய்; உன்திருத்தாள்க்கு அடைக்கலம்யான் கண்டாய்;
ஆவளம்சால் புக்கொளியூர் அவிநாசி நாவுக்-
கரசர்மடா லயத்து இலங்கும் ஆனைமுகத்து அரசே! 6

வருத்திடும் ஊழ் வினைவழிஎன் மனம்ஈர்க்க அதன் பின்
வல்விரைந்து ஓடிடுவேன்; உய் வகைபுகுமாறு அறியேன்;
திருத்திஉறும் நடைஅமையாப் பிள்ளைகளைப் பெற்றார்
திருத்திவழிப் படுத்திடல் இச் செகவழக்கேல் கருணை
விருத்திபெறும் நினக்கு அடியேன் பற்பலவா வகுத்து
விளம்பிடல்என் அறியாமை மிகைஅன்றோ? அருள்ப்பேறு
அருத்திடுவாய் புக்கொளியூர் அவிநாசி நாவுக்-
கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசே! 7

எண்ணில்பவம் புரிந்தோர்கள் எண்ணில்பலர்க்கு அருள்நீ
எளிதுஅருளி நின்பதத்தில் எய்தவைத்தாய் என்றே
புண்ணியநூல் அனந்தம்நுவன் றதுகேட்டுஉன் பாதப்
புகல்ஆனேன்; என்அளவில் பொங்கு அருள்நின் உள்ளம்
திண்ணியசோ தனைபுரியத் துவக்குதியேல் அடியேன்
சிந்தைஅயர்ந்துஉழல்வதுஅலால் செய்வகைஏது? அன்பர்க்கு
அண்ணியனே! புக்கொளியூர் அவிநாசி நாவுக்-
கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசே! 8

கழைத்தனுஐங் கணைமாரன், கூற்றன், அயன் என்னும்
கடும்பகைவர் இடும்பையினில் கலங்கும்என்ஆவியை நின்
தழைத்தபர மானந்த வாரிதியாம் பாத
தாமரையில் அமைத்தருள்வாய்; சாணம்மற்றொன்று இல்லேன்
மழைத்தடம் கண்ப் பரவைகொண்கண் வறந்தகுளத் திடையே
வண்புனலும் முதலையும்வாய் மதலையும்எய் துறவே
அழைத்தபுகழ்ப் புக்கொளியூர் அவிநாசி நாவுக்-
கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசே! 9

உறங்குவதும் உண்பதுவும் உலகியலில் வீண்நாள்
ஒழிப்பதுவும் அல்லால்மெய் உணர்வுஉடையோர் கொள்ளும்
திறம் குலவு செயல்அறியேன் என்னைவலிந்து அருளால்
திருப்பிடல்நின் கடனே;சத் தியம்; இதுவிட் டுவிடேல்;
பிறங்குபுகழ் அவிநாசி யப்ப!வலப் பாலில்
பெருங்கருணாம் பிகைப்பேர் அம் பிகைஉவக்கும் [நாதா]
அறம்குலவு புக்கொளியூர் அவிநாசி நாவுக்-
கரசர்மடா லயத்து இலங்கும் ஆனைமுகத்து அரசே! 10

மாது அமையும் இடப்பாகன் திருவடிகள் அன்பில்
மனத்தமைசுப் பிரமணிய மாதவன்றன் தவத்தால்
ஆதரம்சால் புக்கொளியூர் அவிநாசி நாவுக்-
கரசர்மடா லயத்துஇலங்கும் ஆனைமுகத்து அரசை
வாதர்அறி வரியஅத்து விதகவுமா ரத்தோர்
வாழ்த்தும்இரா மானந்த வள்ளல்அருள்ப் பாதப்
போதுஅமையும் உளம்கொள்கந்த சாமிதுதித் திடுபா
புகன்றுஏத்தும் அன்பினர்விண் புலவர்விருந் தினரே. 11

வாரீசர்மடம் என வழங்கும்

## ௯. திருநாவுக்கரசர் மடாலயத் திருப்புகழ்

### 1. விநாயகர் திருப்புகழ்

*தனதானத் தனதன தானன தனதானா*

*மறைஒலிட் டுணர்வரி தாகும்உன்*
*இருபாதத் துணைமிசை பாசிலை*
*மலர்தூர்வைத் திரள்கொடு பூசைசெய் திடும்மேலாம்*
*வழிபாடெப் பொழுதினு மேபுரி*
*தருசீலத் தவம்உடை யார்அருள்*
*வளம்ஆர்பொற் பததுகள் ஆர்வமொ டணியேனோ?*
*சிறைநேர்துச் சில்இயல்மெய் மீதுறும்*
*அபிமானக் குணம்அடி யோடறு*
*சிவஞானப் பொலிவுறு மாறருள் புரிவாயே;*
*திகழ்வான்மெச் சிடுநவ நீதபு-*
*ரியினானுக் கமைவிழி நீடருள்*
*சிறிதேவைக் குதி; சரண் ஆயினன் அடியேனே*
*பிறைபோலப் பொலிகுழல் சேர்அவை*
*கயிலாயத் தவையிடை ஓர்இமை*
*பெயராமுற் புகவிடு பேர்அருள் உடையானே!*
*பெரு நோயிற் றளர்வுறு காவலன்*
*அணிஆர்மெய்ச் சரிதம்வி னாவுதல்*
*பெறுமாறுட் கருதலும், ஓகைஎய் திடஆள்வாய்!*
*திறை போலப் பொருள், உடல், ஆவிகொ*
*டருள்ஞானத் திருவடி வாய் அழி*
*செகசாலப் பிரமைஉ றாதுசெய் குருநாதா!*
*திருவார்புக் கொளிஅவி நாசிகொள்*
*திருநாவுக் கரசர்ம டாலய*
*திருஆர்விக் கினமுதல் வா!சுரர் பெருமாளே!*

## 2. திருநாவுக்கரசர் திருப்புகழ்

தனதானத் தனதானன தனதானா

வளிதோய்பொய்ப் புலவார்உடல் அபிமானித் தவமேமிகு
மதிகேடுற் றுழல்வாரொடு பழகாதே
வடிவேல்ஒத் தியல் கூர்விழி கொடுமாயைத் திமிரேதரு
மடவாரைப் பொருளாகஉள் மதியாதே
ஒளிதோய்துப் புறழ்மேனியின் மிசைஆர்அக் கம்விபூதியும்
உழவாரப் படைதோய்தரு கரமோடே
ஒருகால்எற் கெதிர்தோய்தரி சனமாகிப் பதநீள்சிரம்
உறவேவைத் தியல்ஞானம்எய் துறஆள்வாய்
தளிதோறுற் றமைகாயிக முடனேபுத் தமிழ்தேநிகர்
தமிழ்ஓதிப் பலபாடல்கள் புரிவோனே
தழல்ஆர்வெப் பறையூடெழு தினம் மேவுற் றரனார்இரு
சரண்நிழற் சுகநீர்புகல் புகழோனே
தெளிவோர்சற் றுளமீதறு கடையேனைத் தயவல்இசை
தினம்ஓதித் தொழுமாறருள் குருஆவாய்!
திரள்ஆர்விற் பனமாதவர் நிறைவார்துத் தியமேபுரி
திருநாவுக் கரசாவளர் பெருமாளே!



